சே. இராஜு செட்டியார், எம். ஏ., பி. எல்., அவர்கள் இயற்றியவை.

## காதலி? ஒரு இனிய அருமையான தமிழ் நாவல்

இதில் நவீன நாகரிகம், காதலின் வெற்றி, 'அவனன்றி ஓரணுவும் அசையாது', 'விதியின் வலி' என்னும் பல உயரிய நீதிகள், செல்வர்களின் ஆடம்பர வாழ்க்கை, சீர்திருத்தத்தின் சீர்கேடு ஆகிய பல அரிய அறிவைப் புகட்டும் அதியற்புத விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. விலை ரூபா 0-12-0

## நாகரிகர்?

'நாகரிகம்' என்ற உயர்ந்த பெயரை வைத்துக்கொண்டு இக்காலத்து நடைபெறும் பல போலி வழக்க ஒழுக்கங்களின் சீர்கேடுகளை ஒழிக்கவும், நீதியும், உண்மையும், அன்பும் நிலைகுலைந்து, மூலை முடுக்குகளில் தேங்கிக் கிடக்க, அநீதியும் பொய்யும் கொடுமையும் ஒருங்கு திரண்டு கரைகடந்து பெருகி வரும் பெரு வெள்ளத்தைத் தடுக்கும் அணைக்கட்டாக இந்நாவல் வரையப்பட்டது. இதில் உள்ளதை உள்ளபடியே எடுத்துக்காட்டி இந்தியர் எல்லோரும் ஒன்று சேர்ந்து அன்புடன் வாழ வேண்டுமென்று அரும் பெரும் நீதிகளடங்க பலதிறத்து மனிதர்களின் சுபாவத்தையும் போக்கையும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது; இதில் ஜாதி சமூக கட்டுப்பாடுகளின் ஊழல்களும், அர்ச்சகர்களின் அருங்குணங்களும், கருங்கொருமிக்காரர்களின் அந்தரங்கப் பிழைப்பும், மோசக்காரர்கள் இறுதியில் நாசமுறுவதும், பல அக்காட்சிகளோடு விரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. இதை எல்லோரும் வாசித்து நற்பயனடைந்து இன்புறுவார்களாக. விலை ரூபா 2-0-0

## அன்பானந்தன் அல்லது அருஞ்செல்வன் விளைந்த பெருஞ்செல்வம்

இந்நூலின் கதாநாயகன் பெயரே இந்நூற்கும் பெயராய் அமைந்தது. **அன்பானந்தன்** என்னும் பெயரால் இரண்டு உண்மைகள் அறியலாகும்; அன்பு, ஆனந்தத்தில் முடிந்து அதனோடு ஒன்றாகி விளங்கும் என்பதொன்று; மற்றொன்று இந்நூல் எந்தப் பாஷையில் எழுதப் பட்டுள்ளதோ, எந்தப் பாஷை நமக்குத் தாய்ப்பாஷையாக வுள்ளதோ, அந்தப் பாஷையின் பெருமை இப்படிப் பட்டதென்பது. தமிழ் என்னும் சொல்லே இனிமை என்று பொருள் படும். அன்பைவிட இனிமையுள்ளது வேறில்லை. இன்பும் அவ்வினிமையும் கலந்தால் ஆனந்தம் பிறக்கத் தடையென்ன? இந்த ஆனந்தம் தமிழ்பாஷை முழுவதும் நிரம்பியிருக்கிறது என்பதைக் குறிப்பிக்கவே, தமிழ் எழுத்துக்களின் முதலெழுத்தாகிய 'அ' என்பதும், இறுதி எழுத்தாகிய 'ன்' என்பதும் இந்நூற் பெயர்க்கு முதலும் இறுதியு மாக அமைந்தன. இதன் விலை ரூபா 1-4-0

## சந்திரசேகரி

எளிய, இனிய நடையில் எழுதப்பட்டது. உலகோருடைய ஒழுக்கங்களை [redacted] விசேஷமாகக் கொண்டது; அன்பின் மகிமை, பொறுமையின் பெருமை, கேடு நினைப்போர் கெடுவர், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் முதலிய பல அரிய விஷயங்கள் இதில் விளக்கமாகவும் படிப்போர் மனதைக் கவரக்கூடியதாகவும் எழுதப்பட்டிருக்கிறது. இதன் விலை ரூபா 1-4-0

---

ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை சென்னை.



"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.


| தொகுதி 30 | தாரண௵ கார்த்திகைமீ கஉ<br>1944௵ நவம்பர்மீ 16உ | பகுதி 5 |
|---|---|---|


## உள்ளுறை.

| எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|
| 1. | கடவுள் வணக்கம் | 232 |
| 2. | தமிழ் எழுத்தாளர் மகாநாடு | 233 |
| 3. | ரேடியோ சரித்திரம் | 236 |
| 4. | விதியின் கட்டுப்பாடு | 239 |
| 5. | ஜ்யோதிஷ பல ரகஸ்யம் | 245 |
| 6. | செல்வமும் ஆரோக்கியமும் | 247 |
| 7. | வெங்கடராமனின் சேவல் | 253 |
| 8. | கங்கையைக் கண்டேன் | 257 |
| 9. | குழந்தையின் தியாகம் | 261 |
| 10. | ரேகை சாஸ்திரம் | 268 |
| 11. | விஞ்ஞானம் விதியியல் சிறப்பெய்தல் | 271 |
| 12. | சிலப்பதிகாரம் பெருங் காப்பியமே | 275 |
| 13. | சிலப்பதிகாரம் பெருங்காவியமா? | 279 |
| 14. | தேவதேவி | 284 |
| 15. | நிராயன சுத்த ஸ்புடம் | 289 |
| 16. | பஞ்சாங்கம் | 290 |




## கடவுள் வணக்கம்.

ஒளியில் விளைந்த உயர் ஞான
பூதரத் துச்சியின் மேல்
அளியில் விளைந்தொ ரானந்தத்
தேனை, யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப்
பெற்ற வெறுந் தனியைத்
தெளிய விளம்பிய வா!முக
மாறுடைத் தேசிகனே. (1)

குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடும்
ஐவரிற் கொட் படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்று
வாய்; இரு நான்கு வெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங்
குலுங்க விண்ணாரும் உய்யச்
சப்பாணி கொட்டிய கையா(று)
இரண்டுடைச் சண்முகனே. (2)

தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழுஞ் செழுஞ்சுடரே!
வைவைத்த வேற்படை வானவ
னே! மற வேனுனை நான்;
ஐவர்க் கிடம்பெறக் கால் இரண்டு
ஓட்டி, அதில் இரண்டு
கைவைத்த வீடு குலையுமுன்
னேவந்து காத்தருளே. (3)

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்
புடன் கிரி யூடுருவத்
துளைத்துப் புறப்பட்ட வேற்கந்த
னே! துறந் தோர் உளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப்
பதைக்க வதைக்குங் கண்ணார்க்கு
இளைத்துத் தவிக்கின்ற என்னை
எந்நாள் வந்து இரட்சிப்பையே. (4)

# தமிழ் எழுத்தாளர் மகாநாடு

"உலகை, ஒரு நாட்டை ஆளும் கோலினும் உயர்ந்தது எழுத்தாளரின் தன்னலமற்ற கோல்"—இப்படி மேலை நாட்டில் ஒரு எழுத்தாளர் கூறினர். ஆம், எழுத்தாளர்களின் கூட்டம் நாட்டின்—சமூகத்தின் முக்கியம் வாய்ந்த ஒரு அங்கமாகும். ஒரு நாட்டின் உயர்வுக்கு—அதன் நேர்மைக்கு ஜீவனாக விருப்பவர்கள் எழுத்தாளர்கள் தாம். இத்தகையோர்களை உலகிலே எந்த சர்வகலாசாலையும் உற்பத்தி செய்துவிட முடியாது. மற்றும், நாட்டின்—சமூகத்தின் அதிருஷ்ட வசமாக, இயற்கையாகவே தோன்றுகிறவர்கள் அவர்கள். இந்த உண்மையை உலகம் உணர்ந்துதான் இருக்கிறது. அதனால்தான் எழுத்தாளர்களுக்கு முதல் இடம் தந்து எங்கும் கௌரவிக்கப் படுகிறது.

சரீரத்திற்கு மூளை பாகம் முக்கியமாவது போல சமூகத்தின் முக்கிய அங்கமான எழுத்தாளர்களின் இன்றைய நிலைமையைக் கவனிக்கவும்—எதிர்காலத்தில் புதிய ஒரு யுகத்தை சிருஷ்டிக்கவும் யாருக்குக் கவலை? அவர்களிடம் தான் அந்தப் பொறுப்பு இருக்கிறது. இதை முதலில் உணர்ந்தது தமிழ் நாட்டு எழுத்தாளர்கள் தாம். அவ்வகையில், தமிழ் நாடு முதல் ஸ்தானத்தைப் பெற்று விட்டது.

தமிழ் நாட்டிலுள்ள எழுத்தாளர்கள் எல்லாம் கோயமுத்தூரிலே, நிகழும் நவம்பர் மாதம் 4-ம் தேதி யன்று ஒன்று கூடினர்கள். இரண்டு நாள், அவர்கள் அங்கே தினசரி ஆசிரியர் **ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை** தலைமையில் நடத்திய மகாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்களில் பல முக்கியம் வாய்ந்தவை. '**தமிழ் எழுத்தாளர் சங்கம்**' என்று ஒரு ஸ்தாபனத்தை சென்னையை மத்ய ஸ்தானமாகக் கொண்டு அமைப்பதென்று முடிவு செய்தனர்.

தேசீய கவி பாரதியாரின் பிறந்த ஊராகிய எட்டையாபுரத்தில் நூல் நிலயம் (லைப்ரெரி) ஒன்றும், சென்னையில் அவருடைய ஞாபகார்த்தமாக உருவச் சிலை ஒன்றும் நிறுவுவதென்று தீர்மானிக்கப்பட்டது. அதை அடுத்து, பள்ளிக்கூடங்

களிலே பாரதியாரின் பாடல்களுக்கு 1943-ம் வருஷத்தில் போட்டிருந்த தடையை நீக்கி, எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் அவருடைய பாடல்களைக் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று மகாநாடு கேட்டுக் கொண்டது பாராட்டத் தக்கது.

மொழி வளர்ச்சி சம்பந்தமாக நல்ல திட்டங்களையும்—அவற்றை நிறைவேற்றி வைக்கக் கமிட்டி ஒன்றையும் மகாநாடு நியமித்தது. மிகவும் விரிந்து போயிருக்கும் ஆங்கில பாஷையிலுள்ள மொழிகளுக்குச் சரியான தமிழ்ப்பதங்களைக் கொண்ட 'ஆங்கில—தமிழ் அகராதி,' 'தமிழ்ப் பேரகராதி' ஆகியவற்றைத் தோற்றுவிப்பதற்கான எல்லா வேலைகளையும் இக் கமிட்டி மேற்கொள்ளும். இதன் உருவான வேலை உண்மையில் பெரும் பயனுக்குரியதாகவே இருக்கு மென்று எதிர் பார்க்கலாம்.

'பிற நாட்டு நல் அறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்னும் கொள்கை போல 'திறமையான புலமை யெனில் பிற நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' அல்லவா! அவ்வழி, தமிழ் மொழியிலே தோன்றிய—தோன்றுகிற இலக்கியங்கள்—கவிதைகள்—கட்டுரைகள் எல்லாம் பிற மொழிகளில் பரவச் செய்ய வேண்டும். அது தான் 'தேமதுரத் தமிழ் ஓசை உலக மெலாம் பரவும் வகை' ஆகும். இதற்கு அடிகோலி யிருக்கிறது இம் மகாநாடு. இவை யெல்லாம் எவரும் வரவேற்கும் உன்னதமான முடிவுகளாம்.

இவ்வளவு உயர்ந்த லட்சியங்களைக் கொண்ட தமிழ் எழுத்தாளர்களுடைய வாழ்க்கைத் தரம் இன்று எப்படி இருக்கிறது? லாகூரிலே அகில இந்தியப் பத்திரிகாசிரியர் நிரந்தரக் கமிட்டி கூடிற்று. அது தாய்ப் பாஷை உதவிப் பத்திரிகாசிரியர்களை ஆங்கில உதவிப் பத்திரிகாசிரியர்களைக் காட்டிலும் குறைவாக மதித்து விட்டது. அப்படி மதித்தது இந்தியப் பத்திரிகாசிரியர் எனப் பெறுவோர் குழுவாகும். உண்மையில், ஆங்கில உதவிப் பத்திரிகாசிரியர்களைக் காட்டிலும் அதிகமான திறமை தாய்ப் பாஷை உதவிப் பத்திரிகாசிரியர்களுக்குத்தான் இருக்கிறது. இவர்கள்தான் அதிகமான சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டியவர்கள். இத்தகையோர்களுக்கு ஆங்கில உதவி ஆசிரியர்களுக்கு நிர்ணயிக்கும் குறைந்த ஊதிய வரையினின்றும் குறைவாக இருந்தால் போதுமென்று அக் கமிட்டி கருதி விட்டது. அந்தக் கருத்தை எதிர்ப்புகளுக்கு

இடையிலும் பிடிவாதமாக அது நிறைவேற்றியது தேசத்தி லுள்ள எல்லா தாய்ப்பாஷை எழுத்தாளர்களிடையேயும் ஒரே பரபரப்பை உண்டாக்கி விட்டது. இந்தியப் பத்திரிகாசிரியர் கள் தாய்ப் பாஷை உதவிப் பத்திரிகாசிரியர்களை ஆங்கில உத விப் பத்திரிகாசிரியர்களினும் குறைந்தவர்கள் என்று மதிப்பது போன்ற செய்கை மிகவும் வெட்கக் கேடானது. இதை கோயமுத்தூர் தமிழ் எழுத்தாளர் மகாநாடு மிகவும் அழுத்த மாகக் கண்டித்து தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி யிருக்கிறது.

இதைவிட அகில இந்திய பத்திரிகாசிரியர் கமிட்டிக் கூட் டம் எழுத்தாளர்களுடைய திறமையை அளவிடத் துணிந்தது தான் ஆச்சரியமாக இருக்கிறது. உண்மையிலேயே ஒரு எழுத் தாளரின் கற்பனை சக்தியை அளவிட கல்லூரிப் படிப்பளவை களோ—அல்லது பத்திரிகையின் உரிமையாளரின் மதிப்பளவை களோ பயன்படுமா? அவ்வகையில், ஒரு எழுத்தாளரின் வேலை நேரம்—வேலை அளவு—அவைகளை அனுசரித்த ஊதியம் என் றெல்லாம் நிர்ணயித்து விடுவது சாத்யமா? இந்த எல்லைகளுக் குள் கற்பனை தர்மம் அடங்கியதா? இவைகளைக் கொண்டு எழுத்தாளருடைய சக்திக்கு எல்லை கோல முற்பட்ட அதன் தீர்மானம் சிறிதும் விவேக முடையதல்ல.

ஆகவே, இதுவரையும் சிதறிப் போய் தனித் தனியே இயங்கிக்கொண்டிருந்த தம் சக்திகளை எல்லாம் எழுத்தாளர் கள் ஒன்று திரட்டித் தம் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வ தற்காக தங்கள் ஸ்தாபனத்தில் அங்கத்தினர்களாகச் சேரவேண் டும். மகா நாட்டுத் தீர்மானங்களைக் காரியாம்சத்தில் கொண்டு வருவதற்கு நியமிக்கப்பட்ட கமிட்டியார் தங்கள் வேலைகளை உடனடியாகத் தொடங்குவார்கள் என்றும் எதிர் பார்க்கிறோம். இன்னும், தமிழ் நலத்தில் கண்ணுங் கருத்து முடைய தமிழன்பர்களும் தமிழ் எழுத்தாளர்களின் ஸ்தா பனத்திற்கு ஆதரவளிப்பதின் மூலம் தமிழ்க் கலையை வளர்க்க உதவ வேண்டுகிறோம்.

---

# ரேடியோ சரித்திரம்

டாக்டர். ஏ. எஸ். சஞ்சீவி



**வெ**றும ஆகாயத்திலிருந்து தொனியைத் தருவிக்கின்ற ரேடியோ இயந்திரம் தற்போது அனேக வீடுகளைச் சிறப்பித்து வருகின்றது. இது சாதாரண கிராமவாசிகளால் அலாவுதின் மாயவிளக்கு என்றும், சில பாட்டிமார்கள் "உலகம் கெட்டுப்போச்சு;எங்கோ பாடுவதை இங்கு பாடுதடி'' என்று கூறுவதை என் செவிகளாலேயே கேட்டுள்ளேன். ஆனால் இந்த மாயப் பெட்டியை (ரேடியோவை) ஒருமுறை திறந்து பார்த்தால் அதில் எண்ண முடியாத கம்பிச் சுருள்களும், அவரைப் பிஞ்சு, தகரக் குவளை, சோடாபுட்டிபோல பல பொருள்கள் மலிந்து கிடப்பதும் காணப்படுகின்றன. இந்தப் பொருள்களைக்கொண்டு இதைப் பல ஆராய்ச்சியாளர்கள் வெகு காலமாக ஆராய்ந்து கண்டு பிடித்ததுதான் இந்தப் பெட்டி. இது வேலை செய்வது மின்சார அஸ்திவாரத்தில்தான் ஆகையால் ஆதியில் மின்சாரத்தைக் கண்டு பிடித்த வோல்டா (Volta), மைக்கல் பாரடே (Michael Faraday) ஹார்ட்ஸ் (Hertz), மாக்ஸ்வால் (Maxwell) முதலிய விஞ்ஞானிகளுக்கு நமது முதல் வந்தனம் உரியதாகுக.

மார்க்கோணி என்பவர் துடர் கம்பியின்றி ஒலியை ஆகாய மின்சார உதவியால் பரப்பிக்கொண்டு வரக்கூடும் என்று தன் பிரகிருதி சாஸ்திர ஆராய்ச்சி நிலையத்தில் கண்டுபிடித்து வெளிப்படுத்தினார். அவர் ஓரிடத்தில் ஓர் தாமிரக் கம்பியை உயரக்கட்டி அதில் சில மின்ஸாரயந்திரக் கருவி உதவியால் மின் அலைகளை ஆகாயத்தில் பரப்பி அதை மறுவிடத்தில் நின்று மேற்படி சிலகருவிகள் உதவியால் பரப்பப்பட்ட அலைகளைக் கிரகிக்கலாம் என்று 1896-ம் வருஷம் கண்டுபிடித்தார். இதற்கு இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு ஆலிவர் லாட்ஜ் (Oliver Lodge) "மின்சார சுருதி" யைக்கண்டு பிடித்தார். இவர் கம்பிசுருளையும் (Coil) கனிகரணியை (Condensor)யும் சேர்த்து மின்சார அலைகளைத் தேவையுள்ள அளவில் உற்பத்தி செய்து பரவ விடலாம் என்றும், அதை அதற்குத் தக்க கனிகரணி, கம்பிசுருளை உபயோகித்து கிரகிக்கலாம் என்றும் கண்டு பிடித்தார். லாட்ஜின் ஆராய்ச்சி மார்க்கோணியின் ஆராய்ச்சிக்குச் சாதனமாய் இருந்தது. லாட்ஜின் சுருதி கூட்டும் கருவிகளுடனும், மார்க்கோணியின் ஆகாயக்கம்பி ஆராய்ச்சியின் பயனும் மின்சார அலைகளை நெடுந்தூரம் பரப்பவும் கூடுமெனத் தெரிந்தது. இவ்வாறு மின்சார அலைகளைப் பரப்புவதற்கு "ரேடியோ'' என்று பெயர் அளிக்கப்பட்டது. ரேடியோ என்றால் ஆகாயத்தில் பரப்பி விடப்பட்ட அலைகள் என்று பொருள். ரேடியோவின் அபிவிருத்திக்காக மார்க்கோணிக்கு பிரிட்டிஷ் சர்க்கார் ஆதரவு அளித்தனர்.

மார்க்கோணி ஓர் இத்தாலியர். அவர் இங்கிலாந்து சென்று வில்லியம் பிரீஸ் (William Preace) என்பவரிடம் மின்சார சாஸ்திரப்பயிற்சிபெற்று அவர் ஆதரவில் பிரிட்டிஷ் சர்க்கார் முன்னிலையில் தன் யந்திரத்தை வைத்து முதல் நாலுமைல் தூரத்துக்கு செய்தி அலைகள் அனுப்பினார். பிறகு சிலகாலம் கழித்து மற்றுமொருமுறை 80 மைல்களுக்கு அலைகளைப் பரப்பிக் காண்பித்தார். பிறகு 1901-ம் ஆண்டில் மார்க்கோணி தன் மின்சார அலைகள் மூலம் அட்லாண்டிக் சமுத்திரத்திற் கப்பாலுள்ள நியூபவுண்ட்லேண்டிற்குச் செய்தி அனுப்பினார். பிறகு ரேடியோ அலைகளை உற்பத்தி செய்யும் விஷயத்தில் போல்ஸன் (Polsen) என்ற ஓர் டேனியர் ஆர்க் (Arc) என்ற மின் தனுசுவைக் கண்டுபிடித்தார். 1904-ம் ஆண்டு அம்புரோஸ் பிளமிங் (Ambrose Fleming) என்ற ஒரு இங்கிலீஷ் விஞ்ஞானி "உஷ்ண கவாடம்" (Thermionic Valve) என்ற கருவியைக் கண்டு பிடித்தார். இந்த வால்வ் என்ற கவாடம் ஒரு தகடும் அடியில் ஓர் திரியும் உடையது. இக்கருவியை 1906-ம் ஆண்டில் டாக்டர் லீ டி பாரஸ்ட் (Dr. Lee de Forest) என்ற அமெரிக்கர் ஆராய்ச்சியால் "வலை" (கிரிட்) (grid) என்ற பொருளை உள் சேர்த்து இதற்கு டிரையோட் வால்வ் (Triode Valve) என்று பெயர் மாற்றப்பட்டது. இது தற்போது அனேக ஆராய்ச்சியாளர்களால் பல பொருள்கள் சேர்க்கப்பட்டுப் பல பெயர்களுடன் வழங்கப்பட்டு வருகிறது.

பிறகு முன் கூறிய அக்கவாடங்கள் உள் தகட்டின் வழியே வெளிவரும் சக்தியை ஒரு கம்பிச்சுருளின் உதவியால் மறுபடியும் கவாடத்தின் வலைக்குள் (grid) நுழைத்து அச் சக்தியைப் பன் மடங்கு அதிகரிக்கச் செய்யும் "மறு உற்பத்தி" (Reaction) முறை கண்டுபிடிக்கப்பட்டது. வெளியிடம் கிரகிக்கவும் இம் மறு உற்பத்தி முறை உபயோகப்படுகிறது. இது விஷயமாக மேஜர் ஆர்ம்ஸ்ட்ராங்கும் (Major Armstrong) லீ டி பாரஸ்டும் Lee de Forest) வெகுகால ஆராய்ச்சி செய்து ஒரே முடிவுக்கு வந்தார்கள். மேலும் மெய்ஸருர் என்பவரும் (Meisreur); வான் ஆர்கோ (Von Arco) என்பவரும் மறு உற்பத்தியைப்பற்றி ஆராய்ந்து அதே முடிவுக்கு வந்தனர்.

இவைகள் ஐரோப்பிய மகாயுத்தத்திற்கு முன் ஆராய்ந்தறியப்பட்டவை. ரேடியோ யுத்தத் தொண்டும் செய்யப் பின் வாங்கவில்லை. யுத்தத்திற்குப் பின் ஹாட்ஸ் (Hertz) என்பவரும் ஜெகதீஸ் சந்திரபோஸும் (J. C. Bose) சில ஆராய்ச்சி செய்து பல வால்வுகளைச் சேர்க்கும் முறையை வெளியிட்டனர். (ஏரியல்) எனப்படும் ஆகாய கம்பியில் (Aerial) கிடைக்கும் அலைகளைப் பன் மடங்கு பெருக்குவதற்கும், யந்திரத்தில் வேண்டாத பல விதமான மின்சாரக் கிளர்ச்சிகள் உண்டாகின்றன. அவைகளைத் தடுப்பதற்கும் பல முறைகளை மேஜர் ஆர்ம்ஸ்ட்ராங்கு வெளிட்டார்.

மேஜர் ஆர்ம்ஸ்ட்ராங்கு தன் ரேடியோ இயந்திரத்தின் ஒரு பாகத்தில், தனியளவுள்ள, மின்சார அலைகளை உற்பத்தி செய்து அந்தப் புதிய அலையுடன், ஆகாயக்கம்பியில் கிடைக்கும் வெளியில் இருந்து அனுப்பப்பட்ட மின்சார அலைகளைக் கலந்து, இவ்விரண்டுஞ் சேர்ந்து அலைகளை ஒன்று சேர்த்துச் சக்தி யதிகரிக்க செய்யும் கவாடங்களுக்கு அனுப்பி உபயோகித்தார்.

இந்த கலக்கப்பட்ட இரண்டு அலைகளின் சுற்றளவு போதிய அளவுக்கு அமைவதால் ரேடியோவில் மின்சாரக் கிளர்ச்சிகள் ஏற்படவில்லை. இந்தப் புதிய முறைக்கு மேஜர் ஆர்ம்ஸ்ட்ராங் ஸூப்பர்சானிக் ஹெட்ரோடைன் (Major Armstrong Supersonic Hetrodyne) அதாவது "எதிர் அலை" முறை என்று பெயர் இடப்பட்டது.

பிறகு ரேடியோ நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து கொண்டே வந்தது. இன்னும் அடைந்தும் வருகிறது. 1922-ம் ஆண்டு துவக்கிப் பல கம்பெனிகளால், ரேடியோ செட்டுகள் செய்து, பொதுஜன உபயோகத்துக்கு வழங்கப் பட்டது. ஆனால் இவைகள் எல்லாம் பாட்டரி (Battery) என்ற மின் உற்பத்தி பெட்டியின் உதவியால் வேலை செய்பவை. பிறகு 1928-ம் வருஷம் துட்ங்கி யந்திர மின்சார உதவியால், ஆனால் ஆல்டர்நேட்டிங் கரண்ட் (Alternating Current. (A. C.)] அதாவது "முறைமாறும் மின்சாரத்தில்" வேலை செய்யக் கூடிய ரேடியோக்கள் வெளியாயின. 1931-ம் ஆண்டு முதல் ஆல்டர் நேட்டிங் கரண்டிலும் (Alternating Current), டைரக்ட் கரண்டிலும் (Direct Current) (D C.)] அதாவது "முறை மாறும் மின்சாரத்திலும்" "நேர் ஓட்ட மின்சாரத்திலும்" வேலை செய்யக்கூடிய யூனிவர்சல் மாடல் (Universal Model) வெளிக்குக் கொண்டு வரப்பட்டது. இன்னும் அநேக விஞ்ஞான சாஸ்திரிகள் ரேடியோ கருவிகளில் தங்கள் ஆராய்ச்சியைச் செலுத்தி வருகின்றனர். தற்போது சங்கீத அபிவிருத்திக்கு ரேடியோ ஓர் சாதன கருவியாக உள்ளது. யுத்ததிற்கும் சேவை செய்கின்றது.

ஜப்பானியர்களின் சொல்படி நடக்காவிட்டால் உயிருக்கு ஆபத்து என்று கருதி நிர்ப்பந்தத்திற்காக ஏதோ சில அற்பக் காரியங்களைச் செய்தான் வாங். பலன் என்ன? மரணத்தைத் தாண்டி மரணத்திலேயே குதிக்க வேண்டியதாய் விட்டது. மனித வாழ்க்கையில் இப்படிப்பட்ட தப்பமுடியாத விபரீத நிலைகள் எத்தனையோ!

# விதியின் கட்டுப்பாடு

தா. மா. அப்பாவு



மீ—மி—வாங்!

அதுதான் அவன் பெயர். மியா மியாங்சி நதிக்கரையிலிருந்து சின்மலைக் குன்றுகளுக்கு அருகிலிருந்த ஓர் கிராமத்தில் குடியேறியிருந்தான். வாங்—இதையே பல ஆண்டுகள் கேட்டுப் பழகிப் போயிருக்கிறது. இன்று இத்துடன் அவன் செய்ய வேண்டுவ தொன்றுமில்லை. அப் பெயர் அவனைத் தொத்திக் கொண் டிருக்கிறது. இப்போ 'அது' உலர்ந்த ரொட்டித் துண்டுகள் கிடந்த கூடைக்கருகில் இருந்தது. சாளரத்தின் 'கிரீச்' என்ற ஓசையையும் பர்மிய இடி முழக்கங்களையும் அது கேட்டிருக்கிறது. சுவரோரமுள்ள காலி யிடங்களைக் கண்டு மயங்கியிருக்கிறது.

வாங் தன்னோடு ஒட்டி வாழ்ந்த உடைந்த நாற்காலி ஒன்றின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்தான். முகம் சுருக்கங் கண்டிருந்தது. அவனது சப்பை மூக்கு இரண்டு ஆழ்ந்த மடிப்புகளுக்கிடையிலே உயர்ந்து இருந்தது. அவன் தன் சென்ற கால துன்ப நினைவுகளை எல்லாம் மறக்க முயன்று கொண்டிருந்தான்.

கடைசியாக, அவன் எழுந்திருந்து பலகை யொன்றின்மீது காலை நீட்டிக்கொண்டு கால் சட்டைப் பையிலிருந்து சுங்கான் ஒன்றை எடுத்தான். ஆனால், பற்களுக் கிடையே வைத்து அதைப் பற்ற வைக்க மறந்து விட்டான். தீச்சுடரின் நிழல் விளையாட்டிலே தனது மனைவியும் மக்களும் ஓடுவதையும் கண்டான். 'இங்கு—நான் காவல் காத்துக் கொண்டிருக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டான். தூரத்திலே மரணத்தின் அழைப்பு; எதிரிலே தீ எரிந்து கொண்டிருந்தது. காற்றின் அட்டகாசத்திலே அதன் சுடர் நடன மாடியது. அதே மாதிரிதான் அவன் வாழ்க்கை ஒளியும் விதியின் தாளத்து.........இவ்வுலகில் அவனுக்கு மீத மிருந்த பொருள் எல்லாம் அவனைச் சுற்றியிருந்த சுவர்கள்தான். அங்கேயே அவன் பல நாள் காவல் காத்துக் கொண்டிருந் திருக்கிறான். அவன் முகத்திலே துக்கத்தின் சாயை படர்ந்து வந்தது. அவன் உண்மையிலேயே பயந்துபோய் விட்டான். மத்தியானத்திலிருந்து தனியாக இருந்திருக்கிறான். குளிரும் தனிமையும் அவனை வாட்டிக் கொண்டிருந்தன.

வாங், சாளரத்தின் அருகில் சென்று பார்த்தான். மழை நீர் வயல்களிலே நிறைந்திருந்தது. உலகம் தெளிவில்லாத இளம்

சந்திர கிரணத்திலே மூழ்கி இருந்தது. விண் மீன்கள் உலகை ஏளனம் செய்து கொண்டிருந்தன. வெண்மையான பாதையிலே காற்றிற்கு மேலே சந்திரன் மங்கிக் கிடந்தது.

அவன் கொண்டிருந்த எல்லாவற்றையும் இழந்து விட்டான். அவனது தோல் சட்டையை எடுத்துக் கொண்டனர். அவனே தோழுவத்தில் கட்டியிருந்த மாட்டையும் அவிழ்த்து விட்டான். சிறிது தூரத்திலே பாதையிலே நடந்து செல்லும் மனைவியையும் மக்களையும் கண்டான். அந்தோ! அவர்களைச் சூழ்ந்து மறைக்க வந்ததே மனிதக் கூட்டம்! குதிரைகள், வண்டிகள், துப்பாக்கி, கூச்சல்! அவனைக் கூப்பிடுவது போன்ற பிரமை உண்டாகும். ஆனால், அவனை அழைக்க யார் இருக்கிறார்கள்? அவனுடைய மனைவியோடே அவனுடையது எல்லாம் போய் விட்டது. இப்போது கூரிய வலியையும் இறப்பையும் உடைய அமைதிதான் அவனைச் சூழ்ந்திருக்கிறது.

இரவிலும் பகலிலும் அவன் வெடியோசைகளைக் கேட்டிருந்தான். அவன் பயந்தது என்றாவது ஒரு நாள் தன் வீடும் நெருப்புப் பற்றிக்கொண்டு எரியுமே என்றுதான். அவனது குடிசைக்கும் நெருப்பிடுவதைப் பலதரம் கனவு கண்டு அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருக்கிறான்.

நித்தியத்துவத்திலிருந்து தோன்றிக் குன்றின் உச்சி வழியாக ஏதோ ஒன்று வருவதை வாங் கண்டான். மலைச்சாரலிலே நீண்ட ஒளித் தொடர்; கீழே இருந்த வயல்களில் குழப்பமான ஒலி.

அவன் கூர்ந்து கவனித்தான். ஏதோ ஒன்று ஜாக்கிரதையுடன் வந்து கொண்டிருந்தது. நகர்ந்து வந்த பாதங்களுக்கடியிலே ஈரத்தரை 'சத் சத்' என்று எச்சரித்தது. அமைதியிலே உண்டான அந்த சப்தம் அவன் காதிலே இரும்பு அடிப்பது போல் கேட்டது. அவனது உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது.

திடீரெனக் கதவு திறக்கப் பட்டது. ஒரு போர் வீரன் வாயிலிலே நின்று கொண்டிருந்தான். அவனது தோளிலே துப்பாக்கி தொங்கிக்கொண் டிருந்தது. அவன் தள்ளிக்கொண்டு வந்த சைகிலின் ஒளி அறை முழுதும் பரவிற்று. பர்மிய சோம்பேறிகளிடமிருந்து ஜப்பானியத் தடியர்கள் பிடுங்கிக்கொண்டு வந்த சைகில்கள் முற்றத்திலே நின்று கொண்டிருந்தன.

வாங்கின் இரத்தம் உறைந்து போகத் தொடங்கிற்று. மஞ்சள் கரடியைப் போன்று ஜப்பானிய முரடர்கள் வாயிலிலே நின்று கொண்டிருந்தனர். வெள்ளை ஒளி நீர் நிலைகளின்மீது பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

வாங், தன்னை அவர்கள் 'பெரியவனே' என்று அழைத்து கேள்வி கேட்பதை உணர்ந்தான். தனக்கு ஒன்றும் தெரியாதெனக் கூறக் கைகளை விரித்து அசைத்தான். சில முரடர்கள் உள்ளே நுழைந்து நெருப்பு மூட்டும்படி சைகை செய்தனர். ஓநாய்களைப் போன்று உறுமிக்கொண்டு மேலும் சிலர் உள்ளே வந்தனர்.

அவன் தெளிவடைந்தான். அவனது பயம் மறைந்தது. அவன் ஜாக்கிரதை யடைந்து எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தான்.

குளிர்! குளிர்!!

தாங்களாகவே பலகையின் மீது நீட்டிப் படுத்துக்கொண்ட அந்த அயோக்கியர்களுக்காக அவன் நெருப்பு மூட்டினான். தன்னை நோக்கிச் சிரித்து அவர்கள் பரிகாசம் செய்வதை அவன் உணர்ந்தான். பாவம்! ஏழை வாங் அவர்களை எதிர்த்து என்ன செய்ய முடியும்? எல்லாவற்றிற்கும் தலையை யாட்டினான். இதனால் அவர்கள் திருப்தி யடைந்து திரும்பிச் சென்று விடுவார்கள் என்று எண்ணினான்.

அவர்கள் அவனை என்னென்னமோ கேட்டார்கள். என்னென்ன கேட்டார்களோ—கடவுளுக்குத்தான் தெரியும். எங்கு அவர்கள் இருந்தனர்? எங்கு அவர்கள் இல்லை? அவனுக்குத் தெரிந்ததைப் போல! காலை யாட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த அவர்கள் எழுந்து விட்டனர். அதில் ஒருவன் அடுப்புக் கருகிலே உட்கார்ந்திருந்த வாங்கின் முதுகிலே பட் பட் என தட்டிக் கொடுத்தான். பாவம்! அது வாங்கை பலமாகத் தாக்கிற்று. விஷயம் இன்னதெனப் புரிந்து கொள்ள முடியாமல் தலையைச் சொரிந்தான்.

அவர்கள் தண்ணீரைக் கொதிக்க வைத்து டீ தயாரித்தனர். அஸ்ஸாம் தேயிலையின் வாசனை அறை முழுதும் பரவிற்று. வாங் உதட்டைக் கடித்துக்கொண்டு நெருப்பையே பார்த்துக் கொண்டிருந்தான். திரும்பத் தன்னிடத்திற்குப் போய் உட்கார்ந்து கொண்டான்.

அந்தப் போர் வீரர்கள் தங்கள் உணவைச் சாப்பிடப் பற்களை அசைத்தது வாங்கின் காதுகளிலே டிங் டிங் எனக் கேட்டது. அவர்கள் நாக்கைச் சப்பிக்கொண்டு சாராயம் குடித்தனர்.

அவனுக்கு உள்ளுக்குள் என்னமோ செய்தது.

அவர்கள் சப்தமிட்டுக் கொண்டு தங்களுணவைச் சாப்பிட்டார்கள். சிறிது நேரத்திற்குப் பின் வெளிவந்த பிராந்தியின் நாற்றம் அறை முழுதும் பரவி வாங்கின் தொண்டையை வரட்டத் தொடங்கிற்று.

அவனையும் உணவருந்த அழைத்தனர். அவனுடைய வயிறும் காலியாகத்தா னிருந்தது. அவர்கள் எறிந்த பிஸ்கட் சுருளைகள் அவனருகில் தான் கிடந்தன. ஆனாலும் அவற்றைப் பொறுக்கிக் கொள்ள அவனுக்கு மனம் வரவில்லை.

'கிழவா, இங்கே வா.'

சிப்பாய்கள் அவனை யழைத்தனர்: 'இங்கே வா.'

அந்த வயதான மனிதன் தளர்ந்து போனதை யுணர்ந்தான். தேயிலையின் நறுமணம் அவனை யடிமை கொண்டது. ஆனால் 'நான் போகக் கூடாது' என்று முடிவு செய்தான். ரொட்டித்

துண்டொன்றைக் கடித்துக் கொண்டிருந்த சிப்பாய் ஒருவன் மீண்டும் கூப்பிட்டான்: 'இங்கே வா.'

'நான் போகப் போவதில்லை' என்று அவன் முடிவு செய்தான். அதே சமயம் உணவின் வலிய சக்தி அவனைத் தூண்டியது.

கடைசியாக இரண்டு பேர் எழுந்திருந்து அவனைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்த் தங்களுக்கிடையிலே உட்கார வைத்துக் கொண்டனர்.

அவனுக்கெதிரே இருந்த மேஜைமீது உணவுப் பொருள்கள் சிதறிக் கிடந்தன. அவைகளைச் சாப்பிட அவன் பிரியப்படவில்லை. அவர்கள் யாரென்று அவனுக்குத் தெரியாது. முன் பின் பார்த்ததில்லை. அவனுக்குத் தெரிந்ததெல்லாம் அவர்கள் ஜப்பானியர்கள் என்பதுதான்.

'என்னை விஷமிட்டுக் கொல்லப் போகிறார்கள்' என்றெண்ணினான் வாங். கூரைக் கடியிலே காற்று மாறி அடிக்கத் தொடங்கிற்று. நெருப்பு அசைந்தாடி அணைந்து விட்டது. ஜப்பானிய குண்டர்களின் நிழல் சுவரிலே படிந்திருந்தது. வலியிழந்த சந்திரன் சாளரத்தின் வழியாகத் தெரிந்தது. வாங் அந்தச் சிப்பாய்களுக்கு நடுவே பலகையின் மீது பிசாசைப்போல உட்கார்ந்து இருந்தான்.

'நிச்சயமாக அவர்கள் என்னை விஷமிட்டுக் கொல்லப் போகிறார்கள்.' இப்படித்தான் வாங் தன் மனத்துக்குள்ளே திரும்பத் திரும்ப எண்ணினான். அவனுடைய அப்பனும் இப்படித்தான் ஒரு நாள் சந்தையிலிருந்து திரும்பி வரும்போது கொல்லப்பட்டான். 'அவர்கள் என்னை விஷமிட்டுக் கொல்லப் போகிறார்கள்.'

. சுவரின்மீது படிந்திருந்த நிழல் அவனை ஏளனம் செய்தது. சிப்பாய்கள் பலமாகப் பேசத் தொடங்கினார்கள். அவர்கள் வாய் விரல்கள் எல்லாம் கொழுப்பினால் பளபளத்தது. தங்களது கச்சைகளை அவிழ்த்துத் துப்பாக்கிகளை ஒரு புறமாய் வைத்தார்கள். வாங்கின் அருகிலிருந்த ஒருவன் அவன் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டான். அவனது சிவந்த வாய் மிக அருகில் இருந்தது. அவன் தன் கையை தலைக்கு மேலாக்க் கொண்டு போனான். இப்போது வாங்கின் தொண்டையைச் சுற்றி அவனது கை இருந்தது. அவன் இளைஞன். தன் தந்தையைப் பற்றிப் பேசினான்.

'அப்பா சாப்பிடு'. ஒரு துண்டு ரொட்டியை அவன் வாங்கின் பற்களுக் கிடையே வைத்தான்.

வாங் பற்களை இறுக மூடிக் கொண்டான். ஆனால் அதே சமயத்தில் ரொட்டியின் ஒரு பகுதியைக் கடித்து விட்டான்.

'அப்பா—' அந்த இளைய சிப்பாய் மீண்டும் ஒரு துண்டு ரொட்டியை நீட்டினான். முகத்திலே மெதுவாகத் தட்டி விட்டுச் சிரித்தான்.

வாங் உள்ளுக்குள்ளே வருத்தப்பட்டான். அரைக் குருடனைப் போலவா அவன் உண வருந்த வேண்டும்? அவனுகவே சாப்பிட்டுக் கொள்ள முடியாதா?

வாங் தானுகவே சாப்பிடத் தொடங்கியபோது சிப்பாய்கள் கூச்சலிட்டுச் சிரிக்கத் தொடங்கினர். அவர்கள் கால்களையும் கைகளையும் ஆட்டிக்கொண்டு சத்தமிட்டனர்.

தன்னை நோக்கித்தான் அவர்கள் சிரிக்கிருர்கள் என்பதை வாங் அறிவான். அதற்காக அவன் வருத்தப்படவில்லை. தான் அவர்களுக்குச் சந்தோஷம் தருவதாக எண்ணினுன். தனக்கு அவர்கள் உணவு தந்ததற்காகத் திருப்பி ஏதாவது தர வேண்டுமென மட்டத்தனமாக எண்ணினுன். சில சமயம் அவர்கள் அவன் தோளின் மீது தட்டிக் கொடுப்பார்கள். அவன் முகத்திலே புன்னகை தோன்றி மறையும்.

சாராயம் டீ எல்லாம் அவனுக்குத் தந்தனர். 'அப்பா' என்று அந்த இளைஞன் சில சமயம் கூப்பிடுவான். அவன் பர்மிய மலைகளின் பக்கம் கையை நீட்டிக் கொண்டிருப்பான். அவன் கண்களிலே நீர்த்திவலைகள் உருளும். 'அவன் பெரியவர்களுக்கு மரியாதை செய்கிருன்—அவர்களும் மனிதர்கள்தான்' என்று எண்ணினுன் வாங். தீயில் இன்னும் சில விறகுகளைப் போட்டு எழுந்தான்.

அவர்கள் அவனைப் பிடித்துக் கொண்டனர். அவன் நட்பதை அவர்கள் அனுமதிக்க முடியாது. ஒரு இளைய சிப்பாய் குதித்தெழுந்தான்.

'உட்கார்;—நீ வயதானவன்.'

வாங் காலியான குழாயை நீட்டினுன். அந்தக் கோஷ்டியின் தலைவனே அதை நிறைத்தான்.

ஆகவே அவன் ஆயுதந் தாங்கிய முரடர்களுக்கு மத்தியிலே உட்கார்ந்து விட்டான். அவர்கள் தோலாடை யணிந்து குளிரினுல் தாக்கப்படா திருந்தார்கள். ஆனுல் வாங் ஒன்று மில்லாது குளிரினுல் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனுக் கருகிலிருந்த இளைஞன் தன் மேல் சட்டையைக் கழற்றி அவனுக்குக் கொடுத்தான்.

மெதுவாக நிமிடங்கள் கழிந்தன. போர் வீரர்கள் எல்லோரும் தங்கள் இராச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு தங்களது அடுத்த காரியத்தில் கவனம் செலுத்தினர். ஒருவன் வெளியே சென்று சாளரத்தின் வழியாக எட்டிப் பார்த்தான். மங்கிய நிலவு சிறிது தெளிவடைந் திருந்தது. முகிற் கூட்டங்கள் வான வீதியிலே விளையாடிக் கொண்டிருந்தன. அவன் உள்ளே திரும்பி வந்து கேப்டனிடம் ஏதோ முணகினுன்.

திடீரென எல்லோரும் எழுந்து விட்டனர். கேப்டன் வாங்கின் முதுகிலே தட்டிக் கொடுத்தான். தங்களுக்குச் செய்த உதவிக்காக நன்றி கூறினுன். 'அப்பா, எங்களைப் பாதை வரையிலும் கொண்டு வந்துவிடு' என்று கேட்டான் இளைஞன். அவனுல்

மறுக்க முடியவில்லை. மறுத்திருந்தால் கட்டாயப் படுத்துவார்கள் என்பது அவனுக்குத் தெரியும்.

கிழவன் குடிசையின் கதவை மூடிவிட்டு மெதுவாக நடந்தான். மற்றவர்கள் எல்லாம் தமாஷாகப் பேசிக் கொண்டு அவன் பின்னாலே வந்தனர். 'ஊர் இங்கிருந்து எவ்வளவு தூரம்?' என்று கேட்டான் ஒருவன். கிராமத்திலே யார் யார் எங்கிருக்கிறார்கள் என்றெல்லாம் கேள்வி கேட்டார்கள். வாங் தலையசைத்துக் கொண்டு வந்தான். சில சமயம் பதிலுக்காக ஏதாவது முணுகுவான்.

தனித்த அந்தக் குடிசையிலிருந்து மெதுவாக அவர்கள் நடந்து வந்தனர். புதர்களையும் குழிகளையும் சுற்றிச் சுற்றி யழைத்துச் சென்றான். அவன் மனத்திலே ஏதோ தவறு செய்வதாகப் பட்டது. ஓர் பாதைச் சந்திப்பிலே நின்று விட்டான்.

கேப்டன் அவனை முறைத்துப் பார்த்தான். கிழவனைத் தள்ளிக் கொண்டு போக எண்ணினான். ஆனால் அவன் செய்யவேண்டிய காரியம் அவசரமானது. ஆகவே, அவன் அந்த இடத்திலிருந்து சுற்றிலும் பார்த்தான். சிறிது தூரத்திலே மங்கலான ஒளியிலே குடிசைகளின் உச்சி தெரிந்தது. அந்த வழியாக அவன் மற்றையோருடன் சென்று விட்டான்.

* * * *

மறுநாள் ஊரில் ஏக அமர்க்களம். எங்கு பார்த்தாலும் மக்கள் கூடிப் பேசிக்கொண்டிருந்தனர். 'நேற்று இரவு ஜப்பானியத் தடியர்கள் ஊரைப் பிடிக்க வந்தார்களாம். அவர்களைப் பிடித்து அடைத்தாயிற்று' என்று ஒருவன் விளக்கிக் கூறினான். கிராமச் சாவடியை நோக்கி ஒரு கூட்டம் போயிற்று. 'கிழட்டு வாங்கைப் பிடித்துக் கொண்டு போகிறார்கள்' என்று சொல்லிக் கொண்டனர்.

கிராமச் சாவடியிலே இராணுவ அதிகாரி ஒருவன் முன்னிலையிலே விசாரணை ஆரம்பமாயிற்று. வாங் குற்றவாளியாக நிறுத்தப்பட்டிருந்தான். 'வாங்' நீ துரோகம் செய்து விட்டாய்' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

'ஜப்பானியர்களுக்கு உளவு சொல்லி அவர்களுக்கு, கிராமப் பாதைகளைக் காட்டியதாக உன்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது. நீ சொல்ல வேண்டியதென்ன இருக்கிறது?' என்று இராணுவ அதிகாரி அவனைக் கேட்டார்.

'நான் குற்றவாளி. என்னைத் தூக்கிலிட்டு விடுங்கள். வாங் துரோகம் செய்து விட்டான்.' பிறகு இரண்டுபேர் சாக்ஷிகளாக விசாரிக்கப் பட்டனர். வாங் ஜப்பானியர்களுக்கு வழிகாட்டி அழைத்துச் சென்றதைக் கண்டதாக அவர்கள் கூறினர்.

எதிரிகளுக்கு உளவு கூறியதற்காக வாங்குக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டது. அவ்வூர் இராணுவ முகாமுக்கு அருகே அவன் சுட்டுக் கொல்லப் பட்டான்.

(போலந்துக் கதையொன்றைத் தழுவி எழுதியது.)

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## சி. பி. ஆனந்தம்

### சுதர்மம்—புதிய சிருஷ்டிகள்.

ஒருவருடைய விதியை ஆட்சி கொள்ளும் பலம், உதய கேந்திரத்தில் (Ascendant) யுரேனஸ் கிரகத்தின் ஸ்திதிக்கு உண்டாகிறது. 'விதி' என்பது பொது. அது நல்லதாகவோ அன்றி மற்றதாகவோ இருக்கலாம். எதுவாயிருப்பினும் அதனை யுரேனஸின் ஆதிக்கம் தன் இயல்களில் மாற்றிவிடும். சர ராசிகளில் இந்த நிலைமையைத் தெளிவாகக் காணலாம்.

யுரேனஸ் கிரகத்தின் நல்ல நேர்மைகள் எனப் பெறுவனவற்றுள் '**சுதர்மம்—புதிய சிருஷ்டிகள்**' என்பவை முக்கியமாக வரும். சர ராசிகள் நான்கிலும் '**துலாம்**' உதயமாயின், இந்த நேர்மைகள் மிகவும் சிறப்புக் கொண்டதாகத் துலங்கும். உலகில் தோன்றும் சுதர்மம் வாய்ந்த புதிய சிருஷ்டி கர்த்தாக்கள் எவருக்கும் யுரேனஸின் நேர்மை வாய்ந்த இனிய செல்வாக்கு இருக்கும்.

இத்தகையோர் எளியவர்கள் அல்லது பலவீனமுள்ளவர்கள் கட்சியின் சார்பில் தங்கள் அரிய சக்திகளை யெல்லாம் அர்ப்பணஞ் செய்து வருவார்கள். பொதுவில் மாறுதல் வேண்டாத கொள்கையை (Conservative) உடையவர்களே பழமை, சாத்திரம், மாமூல் இவற்றுள் பதிந்த உள்ளத் தவர்கள்தான். ஆனாலும், அவ்வித சித்தாந்தங்களைக் காலத்திற் கேற்ற மெருகுகளில் புத்துருக் கொடுத்து வெகு சமர்த்தாய்க் கையாளுவார்கள். மனவலியும், உள்முக சிந்தனையும் கொண்டவர்கள். தெய்வ நம்பிக்கை அதிகமுடையவர்கள். ஜ்யோதிஷம்,ரேகை, தீர்க்கதர்சனம் ஆகியவற்றுள் நம்பிக்கை மிகுந்தவர்கள். இரஸாயனம் யந்திரக்கலை இவைகளில் பரிச்சயம் இருக்கும். போரை மனப்பூர்வமாக ஆதரிக்க முடியாதவர்கள். ஆனால், நிர்ப்பந்தமாக அத்தகைய உக்ரத்தில் ஈடுபட வேண்டியவர்களாக விருப்பார்கள்.

அத்யான்மீக விருத்தி மிகுந்தவர்கள். பெரும்பாலும் சாகபக்ஷிணிகளாகவே அதிலும் பத்திய உணவு கொள்பவர்களாகவே யிருப்பார்கள். இவர்கள் தங்களுக்காக இல்லாவிட்டாலும், பொதுவிற்காகப் பெரிய பொறுப்புக்களை வகித்து வருவார்கள். காயஸித்தி—யோக மார்க்கம்—ஞான நிலை இவைகளில் நாட்டமுடையவர்களே. ஆனால் உலக வாழ்வின் நேர்மைகளில் உதவத்தக்க எல்லை வரையுமே அவற்றின் ஆசிரயம் இருந்துவரும். வாழ்க்கைக்குப் பயன்படாத வீரர் கனவுகள் இவர்களுக்குக் கொஞ்சமும் பிடிக்காது. மஹா தத்துவ ஞானிகள் இவர்கள். இவர்களுக்கு பெரும்பான்மையும் 'குடும்ப வாழ்க்கை' ருசிகர மற்றதாக விருக்கும். துறவிகளைப்போல உலகிற்குப் புறம்பாக வின்றி உலகத்தோடு ஒன்றி யிருப்பார்கள். தெளிவான உள்முக திருஷ்டி (Clear Insight) இவர்களுக்கு இருக்கும். புறத்தே காணும் ஒவ்வொன்றினும், தெய்வீகமான கிரண விலாஸத்தைக்

கிரகித்து அல்லது கண்டு வருவார்கள். தத்துவ ஞானியைப் போலத் தோல்விகளை—எதிர்ப்புகளை—கஷ்டங்களை வரவேற்பார்கள். தோல்விகளில்—எதிர்ப்புகளில—கஷ்டங்களில் இவர்களிடமுள்ள அதிசய சக்திகள்—அதுவரை அடங்கியிருந்தவை வீறு கொண்டு எழுந்து அற்புதங்களைச் சிருஷ்டித்துவிடும். இவர்களுடைய சிருஷ்டிகள் உலகில் முக்ய பதிவுக் குரியனவாக் விருக்கும்.

ஜெர்மானிய சர்வாதிகாரி ஹிட்லர் துலா ராசியில் பிறந்தவர். அதில் 'யுரேனஸ்' கிரகம் உதய மத்ய பாகையை அடுத்து ஏறிக் கொண்டிருக்கிறது. ஹிட்லரின் விதியை ஆளும் யுரேனஸின் நல்ல நேர்மைகளில் வரும் பலன்கள் பலவும் அவருடைய வாழ்க்கையில் இடம் பெற்றிருக்கின்றன. பெண்ணைத் தொடாத பிரமசாரி என்றும் சொல்லப்படுகிறது. குடும்ப வாழ்க்கையை ருசிகரமற்றதாகச் செய்துவிடும் யுரேனஸின் செல்வாக்கு, அவரைக் கலியாணமின்றியே வைத்திருக்கிறது போலும். ஜெர்மானிய ஜனசக்தி—அதன நிலைப்பை (Mere Existance) காத்துக் கொள்ளும் நூதன ஆயுதங்கள் எல்லாம் சர்வாதிகாரியின் விதியை ஆளும் யுரேனஸின் வரப்பிரஸாதங்கள் என்னலாம்.

## இராஜ தந்திரிகள்.

இராஜ்யம்—ஜீவனம்—தபஸ்—யக்ஞம் ஆகிய பலன்களுக்குரிய பத்தாம் இடம்—தசம பாவம் கேந்திரங்களில் ஒன்று. உதயத்தால் அதன் மத்ய பாகையில் ஏறிக்கொண்டிருக்கும் (Rising Ascending) யுரேனஸுக்கு விதிச் சக்கரத்தை ஆளும் பலம் உண்டாகிறது. அதேபோலத் தசமபாவத்திலும் அதன் பலன் முழுவதையும் ஆளும் பலம் அதில்—அதன் மத்ய பாகையை அடுத்து ஏறிக் கொண்டிருக்கும் யுரேனஸுக்கு வாய்க்கிறது. இந்த பாவத்தில் இதன் செல்வாக்கு நிர்வாகத் திறமையை அதிகரிக்கச்செய்யும். இந்த பாவம் உள்ள யுரேனஸின் செல்வாக்குக்கு உட்பட்டிருப்பவர்களே பெரும்பாலும் குறிப்பிடத்தக்க இராஜ தந்திரிகளாக பிரகாசித்து வருவார்கள்.

இவர்கள் முன்னவர்களைப்போல சுதர்மமான சிருஷ்டிகர்த்தாக்களல்ல. முன்னவர் சிருஷ்டிகளைப் புதுக்குபவர்களாய்—விசேஷ செல்வாக்குகளுடன் மிளிருவார்கள். அதிகாரமுடைய பதவிகளிலும்—நிர்வாகத்துறைகளிலும் யுரேனஸின் செல்வாக்கு வசிகரம் வாய்ந்ததாக விருக்கும். போர் விருத்தி இவர்களுக்கு ஜீவன். பொது நலத்தைக் காட்டிலும், சுய நலத்தில் அதிகம் கருத்துக் கொண்டவர்களாக விருப்பார்கள். எதிர்—எதிரான போராண்மையைவிட, எதிரியைச் சரணடையச் செய்யும் சாகஸம் நிறைந்த தந்திரிகள் இவர்கள்.

பிரதமர்—வின்ஸ்டன் சர்ச்சில், ஜோஸப் ஸ்டாலின் இவர்களுக்கெல்லாம் தசமகேந்திர பாவத்தின் மத்யத்தை அடுத்து யுரேனஸ் இடங்கொள்கிறது. இவர்களிடம் இயலாக்வுள்ள இயற்கை அறிவு (Intuition). யுத்த தந்திரம் இவை யெல்லாம் பத்தில் வாழும் யுரேனஸின் பலமாகும். (தொடரும்.)

மனித வாழ்க்கைக்குத் தேக ஆரோக்கியம் எவ்வளவு அவசியம் என்று சொல்லத் தேவை இல்லை. ஆகவே எல்லோரும் படித்தறிய வேண்டிய கட்டுரை இது.

# செல்வமும் ஆரோக்கியமும்

வி. சங்கரய்யர்.



இப்பொழுது நம் பொருளாதார நிலைமை மிகவும் சீர்கேடான நிலையி லிருக்கிறது என்பது யாவரும் அறிந்த விஷயமே யாகும். அப்படியிருந்தும் காப்பி, தேயிலை முதலிய குடிகள் நம் நாட்டை விட்டு வெளியேறுவதில்லை. இந்தப் பிசாசுகளை ஓட்டக்கூடிய ஒரு மந்திரவாதியை வெகு நாளாகத் தேடினேன்; இது வரையிலும் கிடைக்கவில்லை.

ஒருவன் முதலில் சாதாரணமாக இருக்கிறான். பின் திடீரென்று அவனை ஒருநாள் பிசாசுகளான காப்பி, தேயிலை, பிராந்தி சாராயம், கள்ளு, புகையிலை, பொடி, சிகரெட், பீடி இவைகளில் ஏதாவது ஒன்று அல்லது சில பிடித்துக் கொள்கிறது. பிசாசு பிடிப்பது அவனை அறியாமலே பிடித்துக் கொள்ளும்; பிடித்தால் பிடித்தவனைக் கொன்றேவிடும். அல்லது அவனிடமிருந்து அதை அகற்ற ஒரு சரியான மந்திரவாதி வேண்டும்.

அப்பேர்ப்பட்ட மந்திரவாதி ஒருவன் தற்சமயம் வருவான் போலத் தோன்றுகிறது. அதுவே சாமான்கள் விலை கொடுத்தும் கிடைக்கா திருப்பது. காப்பிக்கொட்டை முதலியன விலையேறி விட்டது. இனி கிடைக்காது என்ற நிலைமை வரவேண்டும். இனி விலை யேறிவிட்டது. சர்க்கார் கட்டுப்பாட்டினால் கணக்குப்படி கிடைக்கும்—இம்மாதிரியான கடினமான நிலைமை வரவேண்டியதும் அவசியமே.

எலிசபெத் ராணியார் காலத்தில் ஒரு ராத்தல் சர்க்கரை இங்கிலாந்தில் 28 ஷில்லிங் விலை. பவுன் இப்பொழுது ரூ. 40 ஆகையால் ஒரு ஷில்லிங் ரூ. 2. ஆகையால் 8 ஷி = 56 ரூபாய். 56 ரூபாய்க்கும் அரை ரூபாய்க்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். அப்பொழுதுள்ள விலையில் 1-க்கு 100 பாகம் விலையாகத்தான் சர்க்கரை இப்பொழுது விற்கப்படுகிறது.

இனி, இந்தச் சர்க்கரை உடலில் சென்றால் என்ன செய்கிறது என்பதை ஆராய்வோம். இதன் ருசி இதை நம்மை உண்ணச் செய்கிறது. உண்டால் உற்சாக மளிக்கிறது. ஆனால், இதன் சக்தி வெடி மருந்தின் தன்மையை ஒத்ததேயாம். தீ வைத்தவுடன் வெடி மருந்து எப்படி வெடிக்கிறதோ அதுபோலவே இது வயிற்றில் வெடிக்கிறது.

சர்க்கரை வயிற்றில் வெடித்துத் திடீரெனச் சூடுபற்றி வயிற்றி லுள்ள பிராணவாயுவை யெல்லாம் உறிஞ்சி ஜாடராக்கினியைக் குறைத்து ஜீரணநீரைப் புளிக்கச் செய்து அருவருப்பான புகையை உண்டு பண்ணுகிறது. சர்க்கரை நமது சரீரத்துக்கு அவசியம் வேண்டும். தசைநார்கள், எலும்பு நெம்பிகள் இவைகளை இயக்கவும், கை, கால், தலை முதலியவைகளை இயக்கவும் வேண்டிய அளவு சர்க்கரை நாம் சாப்பிடும் அன்னத்தி லிருந்தும் பழங்களி லிருந்தும் கிடைக்கின்றன. அப்படி யிருக்க செயற்கை சர்க்கரையையும் அளவு மீறி உபயோகிக்கின்றோம். இந்த செயற்கைச் சர்க்கரை, கற்கண்டு முதலியவற்றாலாகிய பண்டங்கள் புளிச்சேப்பம், வயிறு உப்புதல் முதலிய வெளித்தோற்ற அடையாளங்களைக் காண்பித்து ஜீரண நீர் உற்பத்தி ஸ்தானத்தைக் கெடுத்துவிடுகிறது. கண் நரம்பு, காது கும்மெனல், வாய் நாற்றம் இவைகளையும் உண்டாக்குகிறது.

காலக் கிரமத்தில் பல ஹீனமும், ஆரோக்கியம், ஆண்மை, பசி, ஒளி, உற்சாகம் முதலியவைகளை இல்லாமல் செய்து சரீரத்தைக் கெடுத்து விடுகிறது. இது இரத்தத்தி லிருந்து வெள்ளைக் கணத்தை (White corpuscles)ப் போக்கி விடுகிறது. இவ் வெள்ளைக்கணம் இரத்தத்தை யணுகும் பல ரோக பீஜங்களைச் சண்டை செய்து கொன்றுவிடும் சக்தியுடையவை. இவை யழிவதால் பல வியாதிகளுக்கு மனிதன் உள்ளாகின்றான்.

முதலில் வயிற்றிலுள்ள ஜீரண நீர்களுக்கு உற்சாக மூட்டி, வேண்டாத வேளைகளில் வேண்டாத உணவுகளை உண்ணும்படி தூண்டித் தசையிலும் ரத்தத்திலும் சேர்ந்துவிடுகிறது. வெள்ளைக் கணத்தை அழித்து விஷத்தை உள்ளே நிறைக்கிறது. பின் கிரமமாக, சளி, காலம் தவறாத முறைத் தலைவலி, நரம்புச் சிக்கல், பல்லில் பாசி படர்தல், பல் வலி, அகால வயோதிகம், சுத்த ரத்த நரம்புகள் தன் மெதுத் தன்மையை இழத்தல் முதலியன காணப்படுகின்றன.

தாய் தகப்பன் உபாத்தியாயர்கள், இயற்கைக்கு விரோதமான தித்திப்புப் பண்டங்களையும் மிட்டாய்களையும் தங்கள் சிறுவர்கள் உண்ணாதபடி பாதுகாக்கவேண்டியது அவசியமாகும். இது விளையாட்டல்ல. இவ் விஷயம் நமது நாட்டைக் காப்போருக்குத் தெரியாமலில்லை. இம்மாதிரி உடலைக் கெடுக்கக்கூடிய சர்க்கரை, காப்பி, மது முதலியவைகளை ஜனங்கள் அதிகமாக உபயோகப் படுத்தாம லிருக்கும்படி செய்யக்கூடாதா இவர்கள்!

நமது பள்ளிச் சிறுவர், சிறுமியர் ஆயிரம் பதினாயிரக் கணக்கான பேர்களின் வயிறுகளில் போய் விழும் விஷத்தை உண்டாக்கிப் பலர் வியாபாரம் செய்கின்றனர். தங்களுக்கு இவை கெடுதல் என்று அறியாமலே இப் பாலர்கள் இத் தின்பண்டங்களை வாங்கி உண்கின்றனர். நமது வளர்கிற மஹா ஜனங்களின் வீரியத்தையும் ஆண்மையையும் இரத்தத்தையும் அடியோடு வேர்

அறுத்து ஜீவனுக்கு அபாயகரமான இவ் வசுத்தம் பொதிந்த பெயரில்லாது கலந்து கிடக்கும் பலவித சர்க்கரையாலான பல இடைக்காலத் தினிகள் கொடுக்கப்படுகின்றன.

ஆகாரம் மோசமாய் அபாயகரமானதா யிருக்கலாமா! பாஷா ணக் கஷாயங்கள், மயிர் மிட்டாய் முதலியன எவ்வளவு கெடுதல்? சர்க்கரை வயிற்றினுள் ஆல்கஹால் (Alcohol) ஆக மாறு கிறது. ருசிக்கு ஆசைப்பட்டு பிராணவாயு. தசை நாரிலுள்ள ஸோடியம் உப்பு, பல்லி லிருந்து கால்ஸியம் சுண்ணும்பு, மூளையி லிருக்கும் பாஸ்பரஸ் இவைகளை அழிக்கப் பாடுபடுகிரும். காசைச் செலவழித்து தேளைக் கொட்டும்படி செய்கிருமே! என்ன விந்தை!

தனிப் பாலாகச் சாப்பிடுவது நல்லது. அதைவிட்டு காப்பி யும் ஜீனியும் சேர்த்துச் சாப்பிடுகின்றனர். ஜீனிச் சர்க்கரையின் கெடுதலை யறிந்தோம். காப்பியின் கெடுதல் தெரிந்து இன்னும் விடமாட்டோம் என்கின்ருேம். இதுவே ஆச்சரியம். காபீன் (Coffeine) பாஷாணம் இரத்த அழுத்தத்தை அதிகமாக்குகிறது. அதிக நரம்புத் தளர்ச்சியை உண்டாக்குகிறது.

இரண்டு வேளைக்கு வயிருர உண்பதற்கு வழியில்லாதவர் களும் ஒரு வேளையாவது இந்தக் காப்பி, தேயிலை முதலிய பானங் களில் ஒன்றைக் குடிக்கின்றனர். முதலில் செல்வர் வீடுகளில் ஆடம்பரப் பதார்த்தமாக இருந்து இப்பொழுது ஏழைகளின் வீட்டை அடைந்து அவர்களுக்கு அவசியப் பொருளாகி, நம் மோடு நல்ல பாம்பைப் போலப் பழகிச் சமயம் பார்த்துக் கொன்று விடுகிறது.

சர்மான்கள் கிடைக்காத இந்த நெருக்கடியான சமயம் தான் காப்பி, தேயிலை, ஜீனி சர்க்கரையால் செய்யப்பட்ட தின் பண் டங்களாகியவைகளை மெதுவாக விடவேண்டிய காலம். அநாசாரப் பிசாசை விரட்டக்கூடிய மந்திரவாதி இக் காலமே யாகும்.

இது நிற்க. நெல்லை மிஷினில் தீட்டி அதிலுள்ள வைட் டமின்ஸ் (ஜீவசத்துப் பொருள்)களைத் தொலைத்து மீதியான சக் கையையும் தண்ணீர்விட்டுத் தேய்த்துத் தேய்த்துக் கழுவிப் பின் வேக வைத்து மீதியுள்ள சத்தையும் கஞ்சியாக வடித்துவிட்டுத் தூய வெள்ளையான அன்னத்தை யுண்ணுபவர், அதி சீக்கிரத்தில் தென் திசையோனின் தூதனை பல நவீன ரோகங்களுக்கு உள் ளாகி, சரியான காலைப் பருவத்தில் அவன் பாதார விந்தத் தையே அடைவதுதான் மிக ஆச்சரியம்!

தற்சமயம், இவ்விஷயம் அறிந்த பலர் நெல்லை அரைப்ப தற்கு மரத்தால் ஒரு திருகை செய்து, அதில் போட்டுத் திரித்து உபயோகிக்க ஆரம்பித்து விட்டனர். அதன் அமைப்பை விளக் கும் படம் இதனடியில் கொடுத்திருக்கிறேன். ஒவ்வொருவரும் இம் மாதிரி திருகையில் நெல்லை அரைத்து உபயோகிக்க முடியும்.

இதனால் அதிக அரிசி காண்கிறது. மிஷினில் காண்பது எவ்வளவோ அதைவிட 16% கைக்குத்தரிசியும் இவ்வாறு திருகையில் அரைத்த அரிசி 10% அதிகமும் காண்பதாக அனுபவஸ்தர்கள் கூறுகிறார்கள். வீட்டில் பெண்களே இவ்வேலையை இலகுவில் செய்ய முடியும். கூலியும் லாபம்; சத்தும் போவதில்லை. அரிசியும் 1-க்குப் 10 பாகம் அதிகம் கிடைக்கிறது. ஆகையால் எல்லோரும் இம்மாதிரி திருகை செய்து நெல்லை வீட்டிலேயே அரைத்துப் பொங்கிக் கஞ்சி வடிக்காமல் அன்னத்தை உபயோகித்துப் பண லாபத்தையும் சரீர ஆரோக்கியத்தையும் அடையும்படி செய்ய வேண்டும்.

இந்தக் கஷ்டமான காலத்தில் ஒவ்வொரு தம்பிடியையும் நன்கு யோசித்துத் தீர்மானித்த பிறகே செலவு செய்ய வேண்டும். வீண் செலவு செய்யாதீர்கள்.

## நெல் அரைக்கும் திருகை




மேல் மூடியின் மேல் பாகம்

நடுவில் அடி மூடி இரும்பு முளை யிருக்க வேண்டும். அதனுள் நெல் விழாதபடி ஒரு சிறு தகட்டால் மேலே மூட வேண்டும். இதன் விட்டம் $1\frac{1}{2}$". அதன் வெளியே இரண்டு சந்திர வட்டம்.



அடிப் பாகத்தின் மேல் பாகம்

நடுவில் உயரமுள்ள $\frac{1}{4}$" கனமுள்ள இரும்பு முளை. $\frac{1}{8}$" ஆழமுள்ள கோடுகள் போடப்பட வேண்டும் இதுபோல மேல் மூடியில் அடி பாகமும் கொத்தியிருக்க வேண்டும்.

1" அகலம் இது வழியாக உள்ளே நெல் விழவேண்டும்.

( 6" ——( 6" —— ) 6" —— ) திருகையின் விட்டம் 18" இருக்க வேண்டும். மேல் மூடியின் உயரம் 4" இருந்தால் போதும். அடிப் பாகம் 6" உயரம் ஆகையால், புளியின் வைரக்கட்டை 18" விட்டம் 6" உயர முள்ளது—1. 18" விட்டம் 4" உயர முள்ளது—1.

2" உயரம் $\frac{1}{4}$" கனமுள்ள இரும்புக் கம்பி—1. 6" உயரம் 2" விட்டமுள்ள மரப்பிடி—1. அதன்மீது கை நோகாமலிருக்க இரும்புக் குழல்—1.

இவைகளே தேவை. எந்தத் தச்ச ஆச்சாரியும் இதைச் செய்துவிடுவார்.

இதற்கு அடுத்தபடியாகக் குடி விஷயத்தைக் குறித்துச் சில வரிகள் எழுதுகின்றேன்.

காப்பி, தேயிலை விலை ஏற்றம், கெடுதல் என்ற விஷயத்தால் விட முடியாதவர்கள், ஆவாரைக் கொழுந்துபூக்கஷாயம் செய்து சாப்பிடலாம். இது ருசியாகவும் தேகத்துக்கு ரொம்ப நன்மையைக் கொடுப்பதாகவும் இருக்கிறது.

ஆவாரைக் கொழுந்து இலைகளை நிழலில் உலர்த்தி வறுத்துக் கருமை நிறம் வந்ததும் எடுக்கவும். அதுபோல மல்லியையும் வறுக்கவும். இவ்விரண்டுடன் கொஞ்சம் சுக்கு, சீரகம், மிளகு இவைகளையும் சேர்த்து இடித்து வைத்துக்கொள்ளவும். கருப்புக் கட்டி அல்லது வெல்லம் போட்டுக் கொதித்த நீரில் இந்தப் பொடியைப் போட்டு வடிகட்டிப் பால் சேர்த்து சாப்பிடுவது மிகவும் நன்மையாகும்.

இவ்வாறு தேகத்துக்கு ஆரோக்கியமானவைகளை அருந்தி வாழும்படி கடவுள்தான் நம்மவருக்குப் புத்தி யுண்டாக்க வேண்டும். சரீரத்தைக் காப்பாற்றுக. சரீரமே முக்கியம் என்பதை மறக்காதீர்கள்.

---

## சந்தா நேயர்கள் கவனிக்க

நமது சந்தாதாரர்களில், சிலர் நமக்குக் கடிதம் எழுதும் பொழுது அவர்களுடைய சரியான சந்தா நெம்பரைத் தெரிவிக்காமல், தவறான சந்தா நெம்பரைக் குறிப்பிட்டு எழுதி நமக்கு மிகவும் கஷ்டத்தைக் கொடுக்கிறார்கள். ஆகையால் அவர்கள் இனிமேலாகிலும் இவ்விதத் தவறு நேராமல் கவனித்து எழுதினால் உடனே பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும்.

மானேஜர்.

தன் காதலிக்காக அவன் காத்திருந்ததோடு மட்டுமல்ல, அவள் தன்னைப் புறக்கணித்து விட்டபோதிலும், அவளுக்காகத் தான் அருமையாக வளர்த்த சேவலையறுத்தும் விருந்திட்டான். என்ன சுயநலமற்ற காதல்! அதற்குத்தான் எவ்வளவு நிச்சயமான பரிசு!

# வெங்கடராமனின் சேவல்

எஸ். சிதம்பரம்



**கோ**டை காலம். காலைநேரம். தோட்டத்தில் செய்த வேலையினால் களைப்படைந்து, காற்றில் மெதுவாக் ஆடி வரவேற்பது போன்றிருந்த வேப்பமரத்தினுடைய குளிர்ந்த நிழலில்தான், அவனுக்குக் கீழே உள்ள அழகிய பள்ளத் தாக்கின் வழியாகக் கௌசிகமாநதியானது வளைந்து வளைந்து ஓடிக் கொண்டிருக்கின்றது. அதனுடைய கரைகளில் செழித்து வளர்ந்திருந்த மரங்கள் தங்களுடைய பசுமையான தலைகளைப் பள்ளத் தாக்கிற்கு வெளியே நீட்டின. அவனுடைய செல்வக்குவியல்கள் எப்படி ஆடல் பாடலில் விரயஞ் செய்யப்பட்டது என்பது உள்ளத்தில் தோன்றியது. அவனுடைய குமுதாவை அவனுடைய விரோதி மணந்தான். ஆனாலும் அவனுடைய மனோராஜ்யத்தை இன்னும் அவளே ஆண்டு வந்தாள். அவளைப்பற்றி அவன் கண்ட இன்பக்கனவுகள பல.

கடைசியாக இந்தச் சிறிய நிலத்திலே ரோசாச் செடிகளைப் பயிரிட்டுத் தன் காலத்தைக் கழித்து வந்தான். அவனுடைய தனிமையான வாழ்வுக்கு, முன்னால் இவனுடைய அரண்மனை வாயிலில் காத்திருந்த நண்பர்கள் துணை செய்யவில்லை. அவனுடைய ஒரே நண்பன் அவனுடைய சேவல்தான். விடுமுறை நாட்களிலே அதுதான் அவனுடைய விருந்தாளி. அவனுடைய இருதயத்திலே இயற்கையாகவே பொங்கி வழிந்த நேசம் முழுவதையும் அந்தப் பறவையின்பால் செலுத்தினான்.

இவ்விதமாக வருடங்கள் வெறுமையானதுபோல் கழிந்தன. ஆனால் ஏதோ ஒன்று சுபிட்சமான காலம் வருகின்றதென்று சொல்லிக்கொண்டிருந்தது. அன்று அவன் கைகளைக் கட்டிக் கொண்டு பாதி இந்த உலகத்திலும் பாதி கனவுலகத்திலுமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். அவனுடைய சேவல் அதனுடைய கழுத்தில் கட்டியிருந்த மணியைக் 'கணீர், கணீர்' என்று ஒலித்துக்கொண்டு, "வெங்கடராமா, வேட்டையாடப் போகலாமா?" என்று கேட்பதுபோல் அவன் முன்னே கம்பீரமாகத் தோன்றியது.

வெங்கடராமனுக்கு வேட்டையின் மேல் எண்ணம் செல்லவில்லை. அவளுடைய இனிய வதனம் அந்த ரோசாச் செடிக்

ளிடையே தோன்றியது, அவன் அவளுடைய முகத்தைப் பார்ப்பதுபோல் தோன்றிற்று என்று நான் சொல்லமாட்டேன். அவன் அவளுடைய முகத்தைப் பார்த்தான். குறு குறு வென்ற கண்கள், கருமையான நீண்ட கேசம்—இவைகளுடைய ஒரு பையன் கம்பீரமாகத் தோட்டத்திற்குள் நடந்து வந்தான். அவன் இவனைப் பார்க்கவில்லை; அந்தப் பறவையையே ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தான். "அழகான பறவை! மணிச் சிறகுகள்! இதனுடன் விளையாட எவ்வளவு ஆசை எனக்கு!" என்று சொன்னான். அந்தக் குரல் அவளுடையது. அது இருள் மூடிக் கிடந்த அவனுடைய இருதயத்திலே அதிசயமான எதிரொலிகளைக் கிளப்பியது.

"நீ யாரப்பா?" என்று கையை மெதுவாக அந்தப் பிரகாசமான தலையில் வைத்துக்கொண்டே கேட்டான். 'என்னுடைய தாயார் பெயர் குமுதா. நாங்கள் அதோ உங்களுடைய தோட்டத்திற்கு அப்பாலுள்ள பெரிய வீட்டில் வசித்து வருகிறோம். கொஞ்சநேரம் உங்கள் சேவலுடன் விளையாடலாமா?" என்றான் சிறுவன்.

அவன் அவ்வாறு ஒவ்வொரு வார்த்தையையும் மெதுவாக உச்சரித்துக் கொண்டிருக்கும் பொழுது, வெங்கடராமன் ஆனந்த சாகரத்தில் மூழ்கினவன்போல் இருந்தான். புயலடித்த பின் கடலில் ஏற்படும் அமைதிபோல் அவனுடைய மனதில் சாந்தி நிலவியது. தனது ஆனந்தமான பகற்கனவுகளிலிருந்து எழுந்து முழங்காற்படியிட்டு அந்தப் பையனை முத்தமிட்டு, அந்தப் பறவையினுடைய வீரத்தைப் பற்றியும் அது எத்தனை சேவல்களுடன் சண்டையிட்டு ஜெயமடைந்திருக்கிறதென்றும் சொல்லிக் கொண்டேயிருந்தான். கடைசியில் அவர்களுடைய சிநேகிதத்தில் அவன் மூன்றாவதாகி விட்டான்.

குமுதா அவளது இளமையிலே விதவையாகி, கோடை காலத்தைக் கழிக்க அங்கே வந்திருக்கிறாள். அந்தப் பெரிய வீட்டினுடைய மைதானத்தில் அங்கு மிங்கும் உலவிக்கொண்டும், தனது கணவனே உயிர் பெற்று வந்ததுபோல் தோன்றிய அந்தப் பையனைப் பார்த்துப் பார்த்து அகமகிழ்ந்து கொண்டும் காலங் கழித்து வந்தாள். அப்படியிருக்க, அவளுடைய மகனோ அங்கு மிங்கும் துள்ளி விளையாடினான். மயிலை விரட்டிச் சென்றான். தோட்டத்து மரத்திலே ஏறி, பழங்களைப் பறித்தான். ஆனால் அவனுடைய முக்கியமான விளையாட்டு அந்தச் சேவலின் பின்னே ஓடுவதும் அதனுடன் குதிப்பதும், அது கூவுவதைக் கண்டு மகிழ்வதும் தான்.

இன்பகரமாகக் கழிந்து கொண்டிருந்த நாட்களில் துக்கத்தின் சாயை படிந்தது. அந்தப் பையன் வியாதியால் படுத்து விட்டான். நாளுக்குநாள் அவனுடைய வியாதி அதிகரித்து வந்தது. தாயாருடைய மனமோ சமாதானம் அடையவில்லை. அவ

ளுடைய மகன் இறந்து விட்டான் என்றே எண்ணினுள். நோயாளியின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, "உன்னைச் சுகப்படுத்த என்ன செய்யலாம்" என்று இரைந்தாள். முதலில் அந்த மூடியிருந்த உதடுகள் அசையவில்லை. கடைசியில் அந்தச் சப்தத்தினுல் திறந்தது. "வெங்கடராமனுடைய சேவலை எனக்கு வாங்கிக் கொடு" என்று வேண்டிக்கொள்ளும் பாவனையில் பதில் வந்தது.

ஆச்சரியமடைந்த தாயாரால் பதில் சொல்ல முடியவில்லை. அதுதான் இந்த தேசத்திலே அருமையான சேவலென்பதும், அது வெங்கட்ராமனிடம் இருப்பதால் அவன் எவ்வளவு பெருமையடைந்திருக்கின்ருனென்றும், அதை அவன் எவ்வளவு நேசிக்கிருனென்றும் அவளுக்குத் தெரியும். ஆனல் தன்னுடைய குழந்தைக்காக அவனிடம்போய் அதைக் கேட்பதா? என்ருலும், அதைக் கேட்டு வாங்கித் தருவதாக் கூறி மகனை மெதுவாகத் தூங்கச் செய்தாள்.

மறுநாள் காலை நேரம் மிக்வும் பிரகாசமாய்த் தோன்றியது. அன்றுதான் பிறந்ததுபோல் பூமி அழகா யிருந்தது. எங்கும் பெயரில்லாத ஒரு அழகு குடி யிருந்தது. அப்படிப்பட்ட காலையிலே இரண்டு அழகிய பெண்கள் தங்களை மூடிக்கொண்டு சென்று கொண்டிருந்தனர். வருத்தமானது சில சமயங்களில் பெண்களுக்கு ஒரு தனி வசிகர சக்தியை அளிக்கிறது; அதே சக்தி அவர்களில் ஒருத்திக்கு இருந்தது. அவளுடைய ஆத்மாவில் ஓடுகின்ற உணர்ச்சிகளினுலாகிய நீரோட்டத்தினுடைய அடையாளமாக அவளுடைய கண்களில் நீர் நிரம்பி யிருந்தது. அடுத்தவளோ அழகாய், ஆனந்தத்துடன் பாடிக்கொண்டே சென்ருள். அவர்கள் குமுதாவும் அவளது உயிர்த்தோழியுமாகும். அவர்கள் நுழைந்தபொழுது வெங்கட்ராமன் வேலை செய்து கொண்டிருந்தான். அவன் இவர்களைப் பார்த்தவுடனே அந்தத் தோட்டமானது ஒரு புனிதமான இடமாகியது. கீழே ஓடிக்கொண்டிருந்த நதி வானுலகத்தில் ஓடுகின்ற கங்கையாகி விட்டது.

குமுதா தனது தலையை மெதுவாக நிமிர்த்தி, வந்தனத்துடன் கூறினுள்: "வெங்கட்ராமா, நாங்கள் இங்கே உனது சிநேகிதர்களாய் வந்திருக்கின்ருேம். இதனுல் முன்பு செய்த நன்றியறிதலற்ற செயல்களுக்கெல்லாம் ஒரு பரிகாரம் செய்யலாமென்று நம்பி வந்திருக்கின்ருேம். உன் வீட்டு வாசலில் காலடி கூட எடுத்து வைக்காதவளும், எனது சந்தோஷ நாட்களில் நீ எனக்கு அனுப்பிய வெகுமதியைக் கூடத் திருப்பியவளுமாகிய நான், இன்று உனது வீட்டிற்கு அழைக்கப்படாமலேயே விருந்தாளியாய் வந்திருக்கிறேன்". அதற்கு அவன் சொன்னுன்: "தங்களுடைய வரவால் பாலைவனம்போல் கிடந்த எனது குடிசை புனித

மாகியது. இந்த ஒரு செயலே கடந்த வருத்தங்களை யெல்லாம் தூக்கி யெறிந்துவிட்டது.'' சற்றுநேரம் பேசியிருந்துவிட்டு, தனது குடிசைக்குச் சென்ருன். விருந்தாளிகளுக்கு நல்ல வரவேற்பளிக்க வேண்டுமென்று எண்ணி ஒவ்வொரு இடமாக என்னென்ன சாமான்க ளிருக்கிறதென்று தேடினன். ஆனல் வீட்டில் அரிசியையும் தண்ணீரையும் தவிர வேருென்றுமில்லை. பணப் பெட்டியோ வெறுமையாய்க் கிடந்தது.

அந்தச் சமயத்திலே கிணிங், கிணிங் என்று மணியை ஆட்டிக்கொண்டு வந்த சேவல், "ஏதாவது வேண்டியிருந்தால் இதோ நானிருக்கின்றேன்'' என்று சொல்வதுபோல் பார்த்தது. ஆம், எல்லாம் வேண்டி யிருக்கின்றது! எஜமானன் உடனே அதைப் பிடித்துக் கழுத்தைத் திருகினன். இனி அது அந்தத் தோட்டத்தில் குதித்துக் குதித்து ஓடாது; கணீர், கணீர் என்ன மணிச் சப்தம் இனி ஒலிக்காது; இனி எந்தச் சண்டையிலும் ஜெயிக்காது; இப்பொழுது அது வெற்றி மாலை சூடிய சேவலல்ல; பலியிடப் பட்ட சேவல்!

வீட்டைச் சுத்தி செய்து இலை போட்டான். பிறகு வந்த விருந்தாளிகளை உள்ளே அழைத்துச் சென்ருன். அவள் உட்கார்ந்திருந்த இடம் ஒரு சிம்மாசனம்போல் தோன்றியது. அவள் உண்ணும் உணவு தேவ உணவாகத் தோன்றியது. அந்த இடமே தேவருலக மாகியது. சாப்பாடு முடிந்ததும் எல்லாரும் எழுந்து தாம்பூலம் தரித்த பின் தோட்டத்திலே சென்று அமர்ந்தார்கள். அப்பொழுது அவள் சொன்னுள்: "நான் இங்கு வந்ததைப்பற்றிய ஆச்சரியத்தை வெளியிடா விட்டாலும், நீ எவ்வளவு ஆச்சரியப் படுகிருய் என்பது எனக்குத் தெரியும். உனக்குக் குழந்தைகள் இல்லை. அதனல் ஒரு குழந்தையானது வியாதியாய் இருக்கும் போது அதனுடைய தாயாருடைய மனம் எப்படிப்பட்ட சொல்ல முடியாத வேதனையை அனுபவிக்கிறதென்று உன்னல் ஊகிக்க முடியாது. அப்பொழுது அவள் அவன் சித்தப்படியே நடக்கிருள். அதனல் தான் நான் எனது கர்வத்தையும் செருக்கையும் ஒரு பக்கத்தில் ஒதுக்கி வைத்துவிட்டு உன்னுடைய வீட்டை நாடி வந்தேன். நீ உனது சேவலை—அது உன்னுடைய ஆத்ம சிநேகிதன் என்பதும், அதுதான் உனது முழு ஆறுதலென்பதும் எனக்குத் தெரியும்—கொடுத்தால் எனது பையன் ஒரு வேளை உயிர் பிழைப்பான்.''

வெங்கடராமன் கவனமாய்க் கேட்டுக்கொண்டிருந்தான். கண்களில் அன்பும் கவலையும் நிரம்பிய கண்ணீர் ததும்ப அவன் பதில் சொன்னுன்: "ஐயோ! குமுதா! நீ கேட்கும்போது அதைக் கொடுப்பதை விட எனக்குச் சந்தோஷமான வேலை வேறு ஏது? ஒரு மணி நேரத்திற்கு முன்னல் அது எனக்குத் தெரிந்திருந்தால் அதை என்னுடைய விருப்பமாகவே நினைத்து நிறைவேற்றியிருப்பேன். ஆனல், உனது வருகைக்கு எப்படிச் சரியான முறை

யில் வரவேற்பளிக்கலாம் என்று தயங்கிக் கொண்டிருந்தேன். உனக்கு முன்னால் இந்தச் சேவலானது ஒன்றுக்கும் உதவாதது போல் தோன்றியது. ஆகவே, நம்முடைய காலைச் சாப்பாட்டிற்காக அது தனது ஆவியை இழந்தது."

வருத்தமும் ஏமாற்றமும் கலந்திருக்க அந்தப் பெண் திரும்பினாள். ஒரு பெண்ணிற்காகத் தனது மனதிற்கு ஆறுதலளித்த ஒரு சேவலைக் கொன்றான் என்று வருந்திக்கொண்டு விடை பெற்றாள். பிறகு ஆத்ம சாந்தியற்று மெதுவாக வெளியே நடந்து சென்றாள்.

மூன்று நாட்கள் கழிந்தன. அந்தோ! அவன் இறந்தானென்று கோவில் மணி ஒலித்தது. வெங்கடராமனிட மிருந்து "அவளுடைய மகன் இறந்து விட்டான்." என்ற பெருமூச்சு வெளியேறியது.

மூன்று மாதங்கள் கழிந்தன. கோவில் மணி சந்தோஷகரமான ஒரு கல்யாணத்தை அறிவித்தது. அந்தக் குடிசை காலியாய்க் கிடந்தது; வெங்கடராமன் இப்பொழுது அதனுடைய கதவடியில் உட்கார்ந் திருக்கவில்லை. மலையடி வாரத்திலுள்ள ஒரு பெரிய மாளிகையில் அவன், குமுதா தன்னுடைய அருகிலிருக்க ஆனந்தமா யிருக்கின்றான். அவர்களுக்குப் பக்கத்திலே கட்டையினால் செதுக்கப்பட்ட ஒரு சேவலின் உருவம் நின்றது. அதற்கு அடியில், "**காத்திருப்பவனுக்கு எல்லாம் கிடைக்கும்**" என்ற வார்த்தைகள் பொறிக்கபபட்டிருந்தன.

[லாங்பெல்லோ என்ற ஆங்கிலக் கவிஞன் எழுதிய ஒரு கவிதையைத் தழுவி யெழுதப்பட்டது.]

---

## சொல்லியிருக்கும் விஷயம்

ஒரு இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டு, ராமய்யரை ஒரு இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொள்ளும்படிக்கு ரொம்ப நாளாகத் தொந்தரவு பண்ணிக் கொண் டிருந்தார். ஆனால், ராமய்யருக்கோ அதற்கு இஷ்டமில்லை. ஒரு நாள் அந்த ஏஜெண்டு கையில் ஒரு புதுப் புஸ்தகத்துடன் வந்தார்.

"அது என்ன புஸ்தகம்?" என்று கேட்டார் ராமய்யர்.

"இதுவா? ரொம்ப நன்றாயிருக்கிறது. நான் படித்தவுடன் தருகிறேன். படித்துப் பாருங்கள். ஒவ்வொருவரிடமும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லுகிறது" என்றார் ஏஜெண்டு.

"அப்படியா, சரி. இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்டினிடம் எப்படி நடந்து கொள்ளுகிறது என்று சொல்லியிருக்கிறதா?" என்று கேட்டார் ராமய்யர் வெடுக்கென்று.

"பேஷாகச் சொல்லியிருக்கிறதே! ஒரு பாலிஸி எடுத்துக் கொண்டு விட்டால் உங்கள் வீட்டுப் பக்கம் அப்புறம் எட்டிப் பார்க்க மாட்டான் என்று சொல்லியிருக்கிறதே" என்றார் ஏஜெண்டு. 'கீச்சு'

காசிக்குச் சென்று வந்து திரு. ரா. பி. சேதுப் பிள்ளை செய்த பிரசங்கத்தைக் குறிப்பெடுத்து அன்பர். சி. ர. பழனியாண்டி இங்கே தந்துள்ளார்.

# கங்கையைக் கண்டேன்

ரா. பி. சேதுப் பிள்ளை



கங்கையில் சிலகாலம் வாழ்ந்தமையால் கந்தன் காங்கேயன் என்ற பெயர் பெற்றான். கங்கை காவிரியைப் போன்றது என்கிறார் கம்பர். கம்பரின் தேசாபிமானம் இதனால் விளங்குகிறது. கங்கையும் காவிரியும் ஒன்றே என்பதற்கு இரண்டொரு குறிப்புகள் தருகின்றேன். நிலங்கள் வளம்பெறக் கைவருந்தி, மெய்வருந்தி உழைக்க வேண்டியதில்லை. காவிரி நீரை திருப்பி விட்டால் போதும். நிலங்கள் வளம்பெற்று விடும். வண்டல்கள் நிரம்பிய கலங்கிய ஆறுதான் பலனுடையது. கங்கையும், யமுனையும் சேரும் இடத்தைப் பார்த்தேன். இதற்குத்தான் திரிவேணி சங்கமம் என்று பெயர். அங்கே அரனடியார்களின் ஆரவாரம் அதிகம். தெளிந்த நீரையுடைய யமுனையைவிடக் கலங்கிய நீரையுடைய கங்கையைப் போற்றுகின்றனர். காவிரி-கங்கை: இவ்விரு நதிகளும் தன்மையில் ஒன்றே. கங்கையில், கண்ட இடங்களில் இறங்கியவரைக் காணல் இயலாது.

காசியிலே மயானத்தைத் தெய்வீகம் பொருந்திய மயானமாகக் கொண்டாடுகிறார்கள். பொன்னேபோல் போற்றுகின்றார்கள். கங்கையாற்றிலே அடுக்கடுக்காகப் பிணங்களை எரிக்கின்றார்கள். எரிகின்றபொழுது இன்னொரு உடல் வருமேயானால் அவ்வுடல் கங்கையாற்றிலே எறியப்படும். "உடலைப் புனிதமாக்கும் சக்தி கங்கைக்கு உண்டு" என மேல் நாட்டு அறிஞர்களே கூறுகிறார்கள். திண்ணமான நம்பிக்கை எவருடைய ஆராய்ச்சியில் உங்களுக் கிருக்கிறதோ அவர்களே அப்படிக் கூறுகின்றார்கள்.

கங்கைக்குள்ள சிறப்புகள் காவிரிக்கும் உண்டெனப் பேராசிரியர்கள் சொல்லுகின்றார்கள். வடநாடு உயர்ந்தது என்றால் ஒத்துக்கொள்ள மாட்டேன். விரிவானது, ஜனப் பெருக்கமுடையது என்றால் ஒத்துக்கொள்ளுவேன்.

தென்னாட்டிலே சிறியவரும் பெரியவரும் ஆசாரமுடையவர்களாகக் காண்கிறோம். காசி மக்களின் மாசுற்ற உடலையும், உடையையும் கங்கையாறுதான் கழுவ வேண்டும்.

நம்மவரில் ஒரு முறை நீராடுவோர், இருமுறை நீராடுவோர், மும்முறையும் நீராடுவோரைக் காணலாம். அங்கே பல நாட்கள்

நீராடாத பலர் இருக்கின்றார்கள். அவர்கள் நீராடாமல் இருப்பதற்குக் குளிரை ஒரு காரணமாகக் கூறுகிறார்கள். இராஜபுதனத்தின் வனங்களிலிருந்து குளிர்ந்த காற்று வீசுகிறது. ஆக்ரா, காசி, டெல்லி வரை அந்தக் குளிரடிக்கிறது. குளிர் ஒருபுறமிருக்கட்டும். அவர்கள் வெந்நீரிலாவது குளித்தல் கூடாதா? ஆகவே, அவர்கள் கூறும் காரணம் போலிக் காரணமே. கங்கையாற்றிலே இறங்கி விட்டால் குளிர் இல்லை. நாங்கள் நீராடும்பொழுது 8-மணியிருக்கும். அங்கிருப்போர் கங்கை 10-மணிக்குத்தான் இடங்கொடுக்கும் என்றார்கள். தென்னாட்டிலிருந்து சென்ற எங்களுக்கு இரவும் பகலும் இடையறாது இடங்கொடுக்கிறது.

சைவரும், வைணவரும் சண்டையிட இடமேயில்லை. சைவருக்குக் கோயில் என்றால் சிதம்பரத்தையே குறிக்கும். வைணவருக்குக் கோயில் என்றால் திரு அரங்கத்தையே குறிக்கும்.

வடக்கே சைவ, வைணவச் சண்டையில்லை; அதற்குப் பதிலாக அங்கே இந்து முஸ்லீம் சண்டையைக் கண்டோம். அவர்கள் சண்டையில் ஒருவர் மற்றொருவரை வேர் அறுத்துக் கொள்வார்கள் போலிருக்கிறது. ஆதியில் சிவபெருமானின் சிறந்த காசி விசுவநாதர் ஆலயம் மகம்மதியர்களின் மசூதியாய் விட்டது. காசியிலே நம்முடைய பெருமானுரைப் பெயர்த்தெடுத்து அங்கு ஒரு கிணற்றிலே போட்டிருக்கிறார்கள். அந்தக் கிணற்றிலே தான் நம்மவர்கள் காசுகளை யெல்லாம் இறைக்கின்றார்கள். அக்காசுகளை யெல்லாம் அங்கிருக்கும் பண்டாரங்கள் தான் ஏற்றுக் கொள்ளுகிறார்களோ அல்லது அப் பெருமான் தான் ஏற்றுக் கொள்ளுகிறாரோ தெரியவில்லை.

அங்கே குருக்கள்மார் மட்டும்தான் இறைவனைத் தீண்ட வேண்டுமென்றில்லை. எல்லோரும் தொழலாம். அவர் அருகே செல்லலாம். இது தான் பண்டைய தமிழர் முறை. வடநாடும் தென்னாடும் ஒரு பண்டமாற்றுச் செய்து கொள்ளவேண்டும். அதாவது வடநாட்டார் தென்னாட்டாரின் ஆசாரத்தைக் கைக்கொள்ள வேண்டும். தென்னாட்டார் வட நாட்டார் இறைவனை வணங்கும் முறையைக் கைக் கொள்ள வேண்டும். இறைவன் ஒரு வகுப்பாருக்கே உரிமையுடைவன் அல்ல. வடநாட்டிலுள்ள காசி விசுவநாதரை நாம் கையால் தொடலாம். சிதம்பரத்தில் நடராஜரை நம்மவர் தீண்ட முடியாது. மனத்தூய்மை யுடைய சைவர்கள் இறைவனைத் தீண்டுவதில் குற்றமில்லை. மனத்தூய்மை பெற்றாரெல்லாம் இறைவனைத் தீண்டுகிறார்கள். தமிழ்நாட்டுக்கு ஒரு காலம் வரும். அப்பொழுது தூக்கிய திருவடியைத் தலையால் தாங்கிக் கொள்ளலாம். காசி விசுவநாதர் கோயிலுக்குச் செல்ல வேண்டுமானால் சிறு சிறு வாயில்கள் வழியாகத்தான் செல்லவேண்டும். ஒரு பெரிய கோபுர வாசல் இல்லை. அந்தக் காலத்தில் மகம்மதியர்கள் மூர்த்திகளையெல்லாம் மசூதியின் படிகளாக உபயோகித்துக் கொண்டார்கள். அந்தக் காலத்தில் நம்மவர்கள் உயிரைக்

கொடுத்து மூர்த்தியைப் பாதுகாத்தார்கள். ஒடுக்கமான இடத்திலிருந்து மாற்றானைத் தடுப்பது எளிது என்பதற்காகவே அந்தக் காலத்தில் சிறு வாயில்கள் அமைக்கப் பட்டதாகத் தெரிகிறது. அந்தப் பெருமானுக்கு எல்லோரும்போய் இடையறாது மாலைகளைப் போடுகின்றார்கள். இறைவனுக்கும் நமக்கு மிடையே தரகன் வேண்டுவதில்லை.

அங்கே நிலங்களெல்லாம் வளம்பொருந்திய தாகவே காணப் படுகின்றன. ஆனால், விளைகின்ற பொருளெல்லாம் வெளியே செல்லுகிறதாம்.

அங்கே ஆங்கிலம், படித்தவர்களாகிய ஒருசிலரிடையே தான் பயன் படுகிறது. தெருவிலே மாணவர்களெல்லாம் அவரவர் தாய் மொழியிலேயே பேசிக்கொள்ளுகிறார்கள்.

நம்மவர் சாலையில் செல்லும் பொழுதும் சோறுண்ணும் பொழுதும் ஆங்கிலமே பேசுகின்றார்கள். நமக்குச் சுதந்திரம் எப்படி வரும்? வட நாட்டார் சுதந்திரத்திற்கு அடிப்படையானவர்கள். அவர்கள் பாஷாபிமான முடையவர்கள்.

நாங்கள் சென்ற மாநாட்டிற்கு All India Oriental Conference என்று பெயர். அதற்குப் பஞ்சாபிலிருந்தும், வங்காளத்திலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். அத்தனை பேரும் ஆங்கிலம் நன்கு கற்றவர்கள். ஆங்கில நாகரிகத்திலே நன்கு தோய்ந்த புலவர் மணிகள். அவர்கள் பேசும் பொழுதெல்லாம் அவர்கள் மொழியிலேயே பேசிக் கொள்ளுகிறார்கள்.

காசிக்குச் செல்ல வாய்ப்புக் கிடைக்காதார் தென்காசிக்குச் செல்லலாம். பராக்கிரம பாண்டியன் காசி செல்ல எண்ணினான். "காடும் மலையும் கடந்து நீ காசி செல்ல வேண்டாம். இங்கேயே காசியைக் காணலா"மென ஈசனார் கூறினார். தென்காசியில் உள்ள மூர்த்திக்கும் விசுவநாதர் என்றே பெயர்.

பிஷப் கால்டுவெல் சொன்னால் நம்புவீர்கள். அவர் 44 ஆண்டுகள் திருநெல்வேலியில் கற்றர் பணி செய்து வந்தார். அவர் 'Comparative Grammar of Dravidian Languages' (திராவிட பாஷைகளின் ஒப்பிலக்கணம்) இயற்றினார். தென்னிந்திய மொழிகளுக்கு அடிகோலிய பெருமை கால்டுவெலுக்கே உரியது. அவர் கூறுகிறார்:

* 'The waterfalls at Kutralam are the best fresh water falls in the world". அவர் ஆங்கிலத்திலேயே கூறியதால் நானும் அதை ஆங்கிலத்திலேயே சொல்லுகிறேன்.

---

* "உலகத்திலேயே புத்தப் புதுத் தண்ணீர் விழும் நீர் வீழ்ச்சி குற்றால நீர் வீழ்ச்சிதான்."

குற்றாலத்தில் மக்கள் அமைதியாக நீராடலாம். வடக்கே 'நைகாரா' அருவியிருக்கிறது. அதற்கு 10 மைலுக்கு அருகே சென்றாலும் காது செவிடாய் விடுமாம். அருகே செல்ல முடியாத அருவி என்ன அருவி? அந்த அருவி பயனற்றதே.

மார்க்கொறைட்டு சவுல்ட்ரி—என்பதை நம்மவர்கள் மருட்டம் சர்வடி என்று மாற்றி அமைத்து விட்டார்கள். அங்கே மருட்டம் தாழ்ந்தது.

மூச்சுதான் ஆயுள். மூச்சை வெளியே வாங்கக் கூடிய சொல் தமிழிலே யில்லை. ஹா, ஹா—போன்ற சொற்கள் மூச்சை வாங்கக் கூடியது.

ஹல்வா என்பதை அழுத்தி உள்ளே உள்ள உஷ்ணத்தின் காரணமாகச் சொல்லலாம். ஆனால் அல்வா என்றுதானே கேட் கிறோம். ஹநுமான் என்று சொல்லுகிறோம்? அனுமன் என்று தானே சொல்லுகிறோம். ஹாமில்டன் என்பது அம்பட்டன் என் றாகவில்லையா? ஆங்கிலேயர்கள் பூவரசு என்பதைப் போர்ஷியா என்று மாற்றிவிட்டார்கள். அப்படியே மிளகு தண்ணீர் என்பதை 'மெலக்டனி' என்று மாற்றி விட்டார்கள். வட நாட்டார் காலை முதல் மாலை வரை தித்திப்புப் பண்டங்களையே உண்டு வருகிறார் கள். காரம், ரசம் முதலியவைகளை அவர்களிடையே காணமுடி யாது. பல நாட்களாக நான் காணாத ரசத்தை ஆந்திர தேசத்தை அடைந்ததும் கண்டேன்.

வட நாடு செல்வோர்க்கு யான் கூறிய குறிப்புக்கள் பயன் படும் எனக் கருதி இவைகளைக் கூறினேன்.

---

## பையனின் சமர்த்து

"சந்துரு! நான் கொடுத்த கடுதாசியைத் தபால் பெட்டியில் போட்டு விட்டாயா?" என்று தாயார் தன் ஆறு வயசுப் பையனைக் கேட்டாள்.

"போட்டு விட்டேன் அம்மா!"

"பின் ஏன் நான் கொடுத்த ஒண்ணரை யணாவையும் கொண்டு வந்து விட்டாய்!"

"ஸ்டாம்பு ஒட்டவில்லை யம்மா! ஒருவரும் பார்க்காத சமயம் பார்த்து கவரைத் தபால் பெட்டியில் போட்டு விட்டேன்."

* * *

## முதலில் செய்ய வேண்டியது

ஒரு பாதிரி:—"நம்முடைய பாபமெல்லாம் மன்னிக்கப்பட வேண்டு மென்றால் நாம் முதலில் என்ன செய்ய வேண்டும்?"

"நாம் பாபம் செய்ய வேண்டும்." 'கீச்சு'

**பார்க்கப்போனால் கேவலம் ஒரு சிறு குழந்தையின் உயிர்தான். ஆனால், அதற்குத்தான் எவ்வளவு சக்தி! அது உலகத்தாரின் கேலிக்கு ஆளாகி மனம் நொந்து போயிருந்த சின்னிக்கு பண்ணையார் மகனிடத்திலேயே செல்வாக்குத் தேடிக் கொடுத்தது. அந்த தியாக உயிர் சிறிதென்றாலும் பெரிதென்றாலும் தியாகத்தின் பலன் ஒன்றுதான்.**



# குழந்தையின் தியாகம்

கு. அழகிரிசாமி.

அவளுக்குத் தன்னுடைய புருஷன் இருக்குமட்டும் கொஞ்சம் மரியாதையாக இருந்தது. ஆனால் இப்போதோ ..........செத்துக் கிடக்கிறவன் பெண்டாட்டி என்றால் யாருக்கும் 'தொக்கு'த்தானே? ஊராரெல்லாரும் அவளை மதனி முறை போட்டுக் கேலி பண்ண ஆரம்பித்து விட்டார்கள்.

சின்னி இப்படிக் கண்ட கண்ட பேர்களுடைய பரிகாசத்துக்கு ஆளாகவேண்டும் என்பது யார் செய்த தவக்குறையோ? ஏனென்றால் அவளை எப்பொழுது பார்த்தாலும் சிரிப்பை அடக்க முடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பவள் போலத் தோன்றும். பிறவியிலேயே அப்படிப்பட்ட முக அமைப்பு. இரண்டு புருவங்களும் மிகவும் மேலே தள்ளி அண்ணாந்து கொண்டிருக்கும். அவள் அழுதாலும் சிரித்தமாதிரிதான் இருக்கும்; சிரித்தாலும் வித்தியாசம் ஒன்றும் தெரியாது.

ஒரு தட்வை அவள் ஏதோ சாமான் வாங்கக் கடைக்குப் போயிருக்கும்போது, 'என்ன? சிரிப்பு அள்ளிக்கிட்டுப் போகுது' என்று கேட்டார் கடைக்காரர். பாவம்! தலையைக் குனிந்தவண்ணம் வீதியை நோக்கு கொண்டு நின்றாள்.

சின்னிக்கு ஆதரவாய் இருந்த அவள் புருஷன் இறந்ததும், தான் இனிமேல் இங்கே இருக்கக்கூடாது என்று சிலோனை விட்டு இந்தியாவுக்குத் தன் கைக்குழந்தையோடும், இரண்டொரு தட்டு முட்டுச் சாமான்களோடும் வந்து சேர்ந்தாள். கடல் கடந்தாவது ஓரிடத்திற்குப் போய்ப் பரிகாசத்திலிருந்து தப்பவேண்டும் என்று நினைப்போடு வந்த அவளுக்குத் தன் முகமும் தன் கூடத்தான் வரும் என்று முன்கூட்டி அறிந்துகொள்ள முடியவில்லை.

கையிலிருந்த சாமான்களை விற்றாள். விற்ற காசும் செல வழிந்து விட்டது. கடைசியில், மதுரையில் வந்து தெருத்தெரு வாய்ப் பிச்சையெடுக்க ஆரம்பித்தும் நாலு நாட்கள் ஆகிவிட்டன.

## 2

'வெறும் வாயை மெல்லுபவனுக்கு அவல் கிடைத்த'மாதிரி ராமசாமிக்கு எதிரிலேயே வந்து விட்டாள் சின்னி. ரயில்வே ஸ்டேஷனில் டிக்கட் வாங்கி ஊருக்குப் புறப்பட வண்டிக்காகக் காத்துக்கொண்டு நின்றான் ராமசாமி. அவன் பிச்சைக்காரப் பெண்களைக் கேலி செய்து தன் வாழ்க்கையில் சிறிது நேரத்தைக் குஷிப்படுத்திக் கொள்ளும் கள்ளமில்லாத பிராணி. சிறு பெண் கள் வந்து பிச்சை கேட்டால் உடனே அவர்களைத் தனக்கு 'நிச்சயதாம்பூலம்' செய்ய ஆரம்பித்து விடுவான். பிச்சை கேட்கக் கூசாத அந்தச் சிறு 'பொட்டை'களுக்குக் கல்யாணம் என்றால் சிம்ம சொப்பனமாயிருக்கும். பேசாமல் நகர்ந்துபோய் விடுவார் கள். பெரிய பெண்களாயிருந்தால் ஏதாவது வேலை கொடுத்துச் சாப்பாடு போடுவதாகச் சொல்லித் தன் ஊருக்கு அழைப்பான். அதற்கெல்லாம் செவி சாய்க்காமல் 'ஐயா ஐயா' என்று கெஞ்சிக் கொண்டே நிற்பார்கள் சில பிச்சைக்காரிகள்.

வேலைக்குத்தான் அலைந்து திரிந்தாள் சின்னி. கடைசியில் வேலை கிடைக்காமல்தான் பிச்சை எடுத்தாவது பிழைக்கலாம் என்று தீர்மானித்தாள். ஆனால், எத்தனையோ பிச்சைக்கார ஜவான்களின் ஆசை இவள் மேலும் பாயவே, அவளுக்கு என்ன செய்வது என்று திகைப்பாகி விட்டது. அப்படி யிருக்கும் போதுதான் அவள் ஸ்டேஷனில் ஒவ்வொருவரிடமும் போய்ப் பிச்சைக் காசுக்காகக் கெஞ்சிக் கொண்டே வந்தது:

"ஐயா, பசி எடுக்குது. ஒரு காலணாப் போடுங்கோ, சாமி"

ராமசாமி கொஞ்ச நேரம் ஒன்றும் பேசாமல் அவள் முகத் தைப் பார்த்துக் கொண்டே நின்றான். அவளை வழக்கம்போல் நகரங்களில் கெட்டழிந்து திரியும் ஒருத்தியாக நினைத்து விட்டான்

"ஐயா...குழந்தை பசியாலே..........."

"குழந்தை உன்னிடத்தில் இருக்கும்போதே பசிக்கு அழு குதா? இதென்ன........" என்று ராமசாமி சொல்லும்போதே அவன் பக்கத்தில் நின்ற கனவானுக்குச் சிரிப்புப் பிய்த்துக் கொண்டு வந்தது.

"சாமி, நாங்க ரெண்டு நாளாச் சாப்பிடல்லே. குழந்தை பசி யாலே கத்துது" என்று தன் குழந்தைக்குப் பசி யேற்பட்ட காரணத்தை விளக்கினாள் சின்னி.

"நீ யெல்லாம் சௌக்கியமாய்ச் சாப்பிட்டு அலையாமே பிள்ளை யையும் ஏன் பெத்து வச்சிக்கிடணும்? புருஷன், வீடு இன்னு

சௌகரியத்தோடு பிழைக்கிறவர்களுக்கே தாளம் போடுகிற காலத்திலே நீ ஊருராகக் குழந்தையைப் பெத்துக்கிட்டு அலையிறயே, என்ன, பட்டத்துக்கா ஆளில்லே?" என்று ஆரம்பித்தான் ராமசாமி.

இப்படிப்பட்ட பேச்சுக்கெல்லாம் அசைந்து கொடுக்காமல் நிற்க வேண்டும் என்ற பிச்சைக்காரச் சமுதாயத்தின் சட்டத்தை மீறிச் சின்னியின் கண்களில் நீர் பொங்கியது.

உடனே மேற்படி கனவான் அவளுடைய முகத்தைக் கூர்ந்து பார்த்துவிட்டு, "அவளுக்குச் சந்தோஷமும் பொறுக்க முடியல்லே; அழுகையும் வருது. அட பாவமே!" என்று சொல்லித் 'திருகாணி கழன்றவர்'மாதிரி தம் சிரிப்பைத் தொடர்ந்தார்.

அப்பொழுதுதான், மனிதன் வாழும் இடத்தில் எல்லாம் தன் முகம் தன்னைக் காட்டிக் கொடுக்கும் என்பதை உணர்ந்தாள் சின்னி.

ராமசாமி, "இவ்வளவு ரோஷம் வருதே, எங்கள் ஊருக்கு வாயேன். பேசாமல் வேலை செய்து சாப்பிடலாம்" என்றதும் தான், கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "அப்படியானால் வாரேன்; வேலை கிடைக்காமத் தான் கஷ்டப்படுதேன்" என்றாள். ராமசாமிக்கு என்ன செய்வதென்று விளங்கவில்லை. கனவான், "என்ன சார், தட்டிக் கொண்டு போக வேண்டியது தானே?" என்று அவனைப் பார்த்துக் கண் சிமிட்டினார். ராமசாமியின் யோசனை எங்கெல்லாமோ ஓடிக் கடைசியில் சின்னிக்குச் சாதகமான ஓரிடத்தில் வந்து நின்றது.

"சரி, இப்படி நில்லு; வாரேன்" என்று சொல்லி விட்டு முன்னமேயே டிக்கட் எடுத்துக்கொண்டவன் பழையபடியும் 'புக்கிங் ரூம்' பக்கம் போனான்.

3

குமாரபுரம் பண்ணையார் வீட்டில் ஆணும் பெண்ணுமாக இருபது வேலையாட்கள். ஐந்நூறு ஏக்கர் கரிசல் நிலத்துக்கும், இரண்டு மூன்று தோட்டங்களுக்கும் சொந்தக்காரரான லக்ஷ்மணக் கௌண்டரின் ஒரே மகன் ராமசாமி. அவன் அழைத்துக் கொண்டு வந்த சின்னி இப்பொழுது இருபதோடு இருபத்தொன்றும் வேலையாளாக வந்து சேர்ந்தாள்.

மாடு கட்டும் தொழுவின் மேற்குக் கடைசிப்பாகம்தான் அவள் வசிப்பதற்கு ராமசாமியால் ஒதுக்கிக் கொடுக்கப்பட்ட இடம். மேற்குப்பக்கம் வெயிலை மறைப்பதற்காகக் கொடுத்த சாக்குப் படுதாவும் கௌண்டர் வீட்டுத் தருமம். அதே சாக்குப் படுதாவையே இரவில் படுக்கையாக விரித்துக் கொள்ளுவது சின்னியின் தந்திரம்.

அவளுடைய குழந்தைக்கு ஆறுமாதம் நிறைந்திருக்கிறது; ஆண் குழந்தை. பாவம், அதனுடைய தகப்பன் அதை ஒரு நிமிஷம்கூடக் கீழே விடாமல் எடுத்து வைத்துக் கொண்டிருப்பான். இப்போது அதனுடைய உடம்பிலும் ஏதோ சீக்கு. எந்நேரமும் 'நச்சு நச்சு' என்று ஒரே அழுகை. மதுரையில் இருக்கும்போது அது சின்னியைப் பிய்த்துப் பிடுங்கி விட்டது. வேறொருத்தியென்றால் அரவமில்லாமல் குழந்தையை நசுக்கிக் கொன்று விட்டாவது "சிவனே" என்று பேசாமல் இருந்திருப்பாள். ஆனால் அந்த நசுநசுத்த குழந்தையிடம் எதை எதிர்பார்த்தோ கண்ணுக்குக் கண்ணாகப் பேணி வந்தாள். குழந்தைக்கோ தினந்தோறும் எமனோடு போராட்டந்தான்!

சின்னி குழந்தையைப் படுக்க வைத்துவிட்டு வேலைக்குப் போய் விடுவாள். சாக்குப் படுதாவில்தான் படுத்திருக்கும். பிற்பகலில் சூரிய கிரணங்கள் அதன் மீது எரிக்கும்போது காந்தல் பொறுக்காமல் துடிக்கும். படுதாவைத் தொங்க விட்டு வெயிலை மறைக்கலாம் என்றால் விரிப்பதற்கு ஒன்றும் கிடையாது. இந்த நிலையில் அந்தக் குழந்தை தன் நோய்க் கொடுமையோடு ஒரு முழ நிழலுக்காகத் தவித்தது. ஆனால், அதைக் கவனிப்பதற்கு அதன் பக்கத்தில் கட்டிக் கிடக்கும் மாடுகளாலும் முடியவில்லை; மனிதர்களாலும் முடியவில்லை. அது செத்துப்போயிருக்கலாம். ஆனால், அதன் உயிர் என்ன அவசியத்துக்கோ அந்த உடலை விட்டு நீங்காமல் இருந்தது.

தினம் தினம் ராமசாமி, தன் வேலைக்காரிகளோடு ஏதாவது பரிகாசம் பேசச் சலிக்க மாட்டான். கொஞ்சம் விரஸமாகக் கேலி செய்தாலும், "பண்ணையார் மகன் அப்படி நம்மோடு பேசுவதற்கு நாம் என்ன தவம் செய்தோமோ?" என்று எண்ணிப் பூரிக்கும் பெண்களிடையில் சின்னி மாத்திரம் தலை குனிந்துகொண்டு நிற்பாள். தன் புருஷன் முன்னிலையில் இப்படிப் பேசினால் அவனுக்கு எவ்வளவு கோபம் வரும் என்பதை நினைத்துப் பின்னும் அவள் மனம் புழுங்கும்.

தன்னுடைய புருஷன் இல்லாததற்குத் தன் குழந்தை பெரியவனாகித் தலையெடுத்து, இந்தப் பரிகாசக்காரர்களின் வாயை ஒடுக்க வேண்டும் என்பது சின்னியின் ஆசைக் கனவு. ஆனால் அது வரையிலும் இப்படிச் சகித்துக் கொண்டிருப்பது எப்படி? சாதாரணமாக, முகம் கோரமாய்ப் போனதற்குக் கேலி செய்ய வருபவர்கள் பின்னால் என்ன வெல்லாமோ 'நொரண்ட' ஆரம்பித்து விடுகிறார்கள். இதே அவமானம்தான் சின்னியின் மனத்தில் சஞ்சலத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது.

4

ஒரு நாள் நடுப்பகல்; வெயில் பொசுக்கிக் கொண்டிருந்தது. தன்னோடு காட்டில் வேலை செய்யும் ஒரு கிழவியிடம்—அந்தக்

கிழவிதான் அவளைப் பரிகாசம் செய்யாதவள்,—"அம்மா! எனக்கு அடிவயித்திலே வலிபொறுக்க முடியல்லே. இதுக்கு என்ன செய்யறது?" என்று கேட்டாள் சின்னி.

சின்னியின் சரித்திரத்தை ஆதியோடு அந்தமாய்க் கேட்டுத் தெரிந்த அந்தக் கிழவி, "பாவம்! எங்களுக்கு வெயிலிலே அலைஞ்சு திரிஞ்சு பழக்கம். எங்களுக்குச் சரியாய் போயிட்டது. நீ குளுரான இடத்திலே தேயிலைத் தோட்டத்திலே இருந்துட்டு இப்போ வெயிலிலே அலைஞ்சால் சூடு தாங்காமல் வயித்துவலி வந்திருக்கும். வெயிலிலே அலைஞ்சிட்டுப் போய் கொழந்தைக்குப் பால் கொடுத்தா அதுக்கும் சூடு தாங்காது" என்றாள்.

"ஆமம்மா! குழந்தையும் இங்கே வந்து துரும்பா மெலிஞ்சு போச்சு. வெயிலிலே வரப்படாதுன்னு, நான் வேலை செய்யாமே எதை வச்சுப் பிழைக்கிறது?" என்று சொல்லிக் கொண்டே கண்ணீர் விட்டாள் சின்னி.

"அப்படியானால் இந்தா பாரு, பண்ணை முதலாளி கோபக்காரர்; அதனாலே, சின்னவர் கிட்டே (ராமசாமியிடம்) போயி, 'காட்டிலே வெயிலிலே அலையிறது பிடிக்கல்லே. வீட்டு வேலை வேணும்னு செய்யறேன்' இன்னு சொல்லேன். விளையாட்டுக்கு ஏதாவது சொன்னாலும் அவருக்கு ரொம்ப நல்ல குணம்" என்றாள் கிழவி.

சின்னிக்கு ஒன்றும் விளங்க வில்லை. பழையபடியும் அவனிடம் போய்ப் பேச வேண்டியதை நினைக்கையில், அவளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

சாயங் காலம் மாடுகளைப் பார்க்கத் தொழுவத்துக்கு வந்திருந்தான் ராமசாமி. அவன் தனியாக நிற்கவே அவனிடம் சின்னி வந்து கூசிக் கூசி அடங்கி ஒடுங்கி நின்றாள். நேரம் வேளையில்லாமல் பரிகாசம் செய்பவனுக்கு, சின்னியின் 'கோரமான' முகத்தைக் கண்டதும் சிரிப்பு வந்துவிட்டது. ஆனால், அவளோ மிகவும் யோசனை செய்த பிறகு,

"ஐயா, எனக்கு வயத்து வலி சாஸ்தியாயிருக்கு" என்று சொல்லி முடிக்கு முன்பே தேள் கொட்டின மாதிரி,

"ஓஹோ, வயத்து வலி வந்து விட்டதா? இனி கொஞ்சநாள் போனால் இடுப்பு வலியும் வரும்" என்றான்.

ராமசாமி ஒரு மனுஷன்தானா அல்லது மிருகமா என்று நினைத்தாள் சின்னி. இருந்தாலும்,

"வெயிலிலே அலைஞ்சு வந்தால் உடம்புக்கு ஆகல்லே. அதோடு வந்து குழந்தைக்குப் பால் கொடுத்ததினாலே அதுக்கும் சூடு ஏறி மெலியுது. இப்படியே இருந்தா "குழந்தைக்குக் கெடுதல், சாமி" என்றாள்.

"ஓஹோ, அப்போ நான் என்ன உன்னைக் குடிசை கட்டி (வயது வந்த சிறு பெண்களை ருது ஸ்நானம் ஆகும் வரைக்கும் குடிசையில் வைத்திருப்பது வழக்கம்.) வைக்கணும்னு கேக்கிறியா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

சின்னி தன் தப்பிதத்தை உணர்ந்து தன்னையே கடிந்து கொண்டாள். தெரிந்திருந்தும், அவனிடம் என்ன பேச்சு வேண்டியிருக்கிறது?

## 5

குழந்தை மிகவும் மெலிந்து போய் விட்டது. இரண்டொரு நாள், வெயிலில் திரிந்து விட்டு வந்ததும் பால் கொடுப்பதை நிறுத்திச் சற்று நேரம் கழித்துக் கொடுக்கலாம் என்று நினைத்தாள். ஆனால் பசி தாங்காமல் முகத்தைப் பார்த்து அழும் குழந்தைக்குப் பால் கொடுக்காமல் ஒரு நிமிஷம் கூடத் தாமதிக்க எந்தத் தாய்க்குத்தான் மனம் வரும்?

பண்ணையாரைப் பார்க்க அடிக்கொரு தட்வை வரும் அந்த ஊர் வைத்தியரிடம் தன் குழந்தையைக் காட்ட அவளுக்கு ஆசை. ஆனாலும் யாரும் என்னமும் பேச ஆரம்பித்து விடுவார்களோ என்ற பயம். தவிரவும், பண்ணையார் வீட்டு ஆட்கள் யாராவது சிபார்சு செய்தாலொழிய வைத்தியர் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டார்.

எப்படியோ சமாளித்துக் கொண்டு, சின்னி குழந்தையைக் கொண்டு வந்து பண்ணையார் வீட்டில் உட்கார்ந்திருந்த வைத்தியரிடம் நீட்டி விட்டாள். வைத்தியரும் சற்று மனமிரங்கிக் குழந்தையின் கையைப் பிடித்துப் பார்த்தார். உடனே, "அடே, தரத்துக்குத் தக்கபடியா இருக்கு? அகாத சூடுல்லே பிடிச்சிருக்கு" என்று சொன்னதோடு, "இன்று குறைப் பொழுதும் போய்த்தான் நிச்சயம் சொல்லணும். அப்புறம்தான் மருந்து கொடுக்கலாம்" என்றும சொல்லி விட்டார்.

சின்னிக்கு ஒரே பதட்டமாய் விட்டது. ராமசாமியும் அன்று அவள் சொன்னதை நினைத்து, "அப்போ, அன்னிக்கு சின்னி சொன்னது சரிதானே?" என்று சொல்லி விட்டு ஏதோ காரியமாக வெளியே போய் விட்டான்.

அவன் வீடு திரும்பும் வரையில் அவனுக்குச் சற்று மன வருத்தமாகத்தான் இருந்தது. அடுத்த நாள் முதல் சின்னியைக் காட்டுக்கு அனுப்பக் கூடாதென்றும், மாதா மாதம் சம்பளம் போல் ஏதோ கொஞ்சம் ரூபாய் அவளுக்குக் கொடுத்து, வீட்டு வேலை செய்து கொண்டிருக்கச் சொல்லலாம் என்றும் நினைத்துக் கொண்டே வீடு திரும்பினான்.

அவன் வீட்டுக்கு வந்ததும் சின்னியின் குழந்தை இறந்த செய்தி அவன் காதில் விழுந்தது. திடுக்கிட்டுப் போய் நின்று விட்டான். என்றாலும் சமாளித்துக் கொண்டு தொழுவத்துக்கு

விறு விறு என்று ஓடினன். 'குய்யோ முறையோ' என்று அழுது புழுவாகத் துடித்துக் கொண்டிருந்தாள் சின்னி. ராமசாமியைப் பார்த்ததும் அவளுக்கு அழுகை கொதித்துக்கொண்டு வந்ததுபோல் இருந்தது. கொலைக் குற்றவாளி போலப் பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு நின்ருன் ராமசாமி.

6

அந்தப் பொல்லாத குழந்தை என்ருே இறந்திருக்கலாம். மதுரையிலோ, ரயிலிலோ இறந்திருந்தால் அதனுடைய மரணம் எவ்வளவு பயனற்றுப் போயிருக்கும்? தன் மகன் பெரிய வாலிபனுகி தன் துயரத்தை மாற்ற வேண்டும் என்று ஆசைப் பட்டதற்குப் பதிலாகத் தன் அறியாத இளம் பிராயத்திலேயே அந்தக் குழந்தை தன் அன்னைக்குச் செய்ய வேண்டிய கடமைகளை எல்லாம் செய்து விட்டது. இதை விடவா பெரிய தியாகத்தைப் பின்னல் சாதித்துவிடப் போகிறது?

இதோ வீடு பெருக்கி விட்டு நிற்கிருள் சின்னி. தன் தாயைப் பார்த்தாலும் அவளிடம் கொண்டது போன்ற பக்தியும் பயமும் ராமசாமிக்கு உண்டாகுமா?

# ரேகை சாஸ்திரம்

## G. B. L.



(புரட்டாசி இதழின் தொடர்ச்சி)

**குஜ (செவ்வாய்) ஸ்தானம்:**—சந்திர ஸ்தானத்திற்கு மேலும், புத ஸ்தானத்திற்குக் கீழும் அமைந்திருக்கும். இந்த இடம் உயர்ந்து உப்பலாய் இருந்தால் குஜ ஆதிக்கம உடையவர்களாவார்கள். இவர்கள் மிகவும் தைரிய குண முடையவராகவும், சண்டையில் கெட்டிக்காரராகவும், வீண் பிடிவாத குண முடையவராகவும் சுதந்திரத்திற்காகத் தம் பிராணனையும் இழக்கத் தயாராய் இருப்பவராகவும், தேகாரோக்கிய முடையவராகவும், சுறு சுறுப்புடையவராகவும், கம்பீரமான குரலும், நடையும் உடையவராகவும், ஷண்முகக் கடவுளை மிகவும் பக்தியுடன் சேவிப்பவராகவும், பூஸ்திதி உடையவராகவும், உற்சாகத்தோடு ரண களத்திற்குச் செல்பவராகவும், சுயம் பாகத்தை (தான் சமைத்த உணவை) அதிகம் விரும்புபவராகவும், உலோகங்களின் தொழிற் சாலையில் வேலை செய்பவராகவும் (முதலாளியாகவும்) உஞந்தால் செய்யப்பட்ட பதார்த்தங்களை அதிகம் புசிப்பவராகவும், இருப்பார்கள். மேலும் இவர்களின் சொத்துக்களுக்குச் செவ்வாய் மகா தசையில் திருட்டுப் பயமும், அக்னி பயமும் ஏற்படும். (செவ்வாய் மேட்டிலுள்ள ரேகைகளின் பலன்களைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்)

**புத ஸ்தானம்:**—சிறிய விரலின் அடிப்பாகத்தில் அமைந்திருக்கும். இந்த இடம் உயர்ந்து (உப்பலாய்) இருந்தால், புதனின் ஆட்சி உடையவர்களாவார்கள். இவர்கள் எபபொழுதும் ஹாஸ்யமாகப் பேசுபவராகவும், சிற்ப வித்யா நிபுணராகவும், சங்கீதத்தில் தேர்ச்சி அடைந்தவராகவும், விளையாட்டுகளில் கெட்டிக்காரராகவும், எழுதுவதில் தன் நிகரற்று விளங்குபவராகவும், சோம்பலின்றித் தன் வேலையில் எப்பொழுதும் கண்ணும் கருத்து முடையவராகவும், மற்றவர்களைக் கண்ட மாத்திரத்தில் அவர்களின் எண்ணங்களைக் கிரகிப்பவராகவும், ஸ்ரீ கிருஷ்ண பிரான் மீது பக்தியுடையவராகவும், வியாபாரத்தில் (உத்தியோகத்தில்) நல்ல லாபமடையக் கூடியவராகவும், சாதுர்யமாகப் பேசுபவராகவும், அழகுடைய புத்திரர்க ளுடையவராகவும், எடுத்த காரியத்தைச் சிக்கிரம் முடித்துப் பெரும்புகழ் அடையக் கூடியவராகவும், வாக்குச் சாதுரிய முடையவராகவும், நாய், குதிரை, பசு, மான், முயல், புறு முதலிய பிராணிகளை அன்புடன் வளர்ப்பவராகவும், வக்கில் தொழிலிலாவது, வியாபாரத் தொழிலிலாவது அல்லது வைத்தியத் தொழிலிலாவது தனம் சம்பாதிப்பவராகவும், இருப்பார்கள். (அவர் எத்தொழில் செய்வார் என்பதை நிச்சயமாக அறிய, அவ

ருடைய விரல்களைக் கவனிக்க வேண்டும். விரல்களைக் குறித்தும், புத ஸ்தானத்திலுள்ள ரேகைகளைக் குறித்தும், பிறகு ஆராய்வோம்.)

**குரு ஸ்தானம்:**—ஆள்காட்டி விரலின் அடிப்பாகத்தில் அமைந்திருக்கும். இந்த இடம் நன்கு அமைந்திருந்தால், குரு ஆட்சி உடையவர்களாவர்கள். இவர்கள் சிவந்த கண்களும், கேசங்களுமுடையவராகவும், கம்பீரத் தோற்றமுள்ளவராகவும், நோயற்ற வாழ்க்கை யுடையவராகவும், புத்திமான்களாகவும், செல்வம் படைத்தவராகவும், வேதவேதாந்தங்களைக் கற்றவராகவும், சமஸ்கிருத பாஷையில் பாண்டித்யம் வாய்ந்தவராகவும், மற்றவர்களுக்கு உபதேசம் செய்யும் சக்தி வாய்ந்தவராகவும், (குருவாகவும்) பிரதி தினம் யோகாப்யாசம் செய்பவராகவும், ஆசார சீலராகவும், வித்யா நிபுணராகவும், தர்ம குண முடையவராகவும், ஏழைகளிடத்தில் இரக்கம் வாய்ந்தவராகவும், அஹிம்சா மூர்த்தியாகவும், ஞானவந்தராகவும், கீர்த்தி, கௌரவம் வாய்ந்தவராகவும், ஆலோசனையில் நிபுணராகவும், உயர்ந்த பதவிகளிலுள்ளவராகவும், அல்லது தேசத்தலைவராகவும், மதப்பற்றுள்ளவராகவும், இனிப்புப்பதார்த்தங்களை அதிகம் புசிப்பவராகவும், சுற்றம் சூழ்ந்தவராகவும், சந்தான சௌக்கியங்க ளுடையவராகவும் இருப்பார்கள். (குரு ஸ்தானத்திலுள்ள ரேகைகளைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்)

**சுக்கிர ஸ்தானம்:**—கட்டை விரலின் அடிப்பாகத்தில் அமைந்திருக்கும் இந்த ஸ்தானம் உயர்ந்து உப்பலாய்க் காணப்பட்டால், சுக்கிர ஆட்சி உடையவர்களாவார்கள். இவர்கள் பிரகாசமான கண்களுடையவராகவும், கருமையாய் நீண்டு வளர்ந்த கேச முடையவராகவும், கான, வித்யா, நாட்டிய, வாத்தியங்களில் நிபுணராகவும், விநோத ஹாஸ்ய கேளிக்கைகளில் காலம் கழிப்பவராகவும், சோம்பலற்றவராகவும், கவி பாடும் சக்தி வாய்ந்தவராகவும், அழகிய ஆடைகளையும், முத்து ஆபரணங்களையும், தரிப்பவராகவும், எப்பொழுதும், தம்மை அழகு படுத்திக் கொள்பவராகவும், வாசனைத் திரவியங்களை உபயோகிப்பவராகவும், ஸ்திரீ லோலராகவும் (தாசிகளாகவும்) அழகுடைய பதி (சதி) வாய்ந்தவராகவும், சிசுக்களின் மேல் அன்புடையவராகவும், வெள்ளிப் பாத்திரங்களை உபயோகிப்பவராகவும், பிரசங்கம் செய்து, எல்லோரையும் ஆகர்ஷிக்கும் சக்தி யுடையவராகவும், புளிப்புள்ள ஆகாரத்தையும், பால், தயிர், நெய் அவரைப் பருப்பு முதலிய வஸ்துக்களை அதிகம் உபயோகிப்பவராகவும், போஜனப்பிரியராகவும், சமயோசித மதி வாய்ந்தவராகவும், ஞாபக சக்தி யுடையவராகவும், பரோபகார குண முடையவராகவும், வாகன (சைக்கிள், மோட்டார், வண்டி முதலியவைகள்) பிராப்தி யுடையவராகவும், சிநேக குண முடைய வராகவும் அன்னிய நாட்டில் உத்தியோகம் (வியாபாரம்) செய்பவராகவும், கண் தெரியாமல் காமம் கொள்வதால் வியாதியஸ்தராகவும் இருப்பார்கள். (சுக்கிர மேட்டிலுள்ள ரேகைகளின் பலன்களைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்.)

**சனி ஸ்தானம்:**—பெருவிரலின் அடிப்பாகத்தில் அமைந்திருக்கும் சனி ஸ்தானம் உயர்ந்து கம்பீரமாய்க் காணப்பட்டால், சனி ஆட்சி உடையவர்களென்று கருத வேண்டும். இவர்கள் கருப்பு நிறமுடையவராகவும், பார்ப்பதற்குப் பயங்கரமான தோற்றமுடையவராகவும், அகன்ற பற்களுடையவராகவும், முள்ளம் பன்றியின் கேசத்தைப்போல் கடினமாயும், முட்களைப்போன்றும், கேசமுடையவராகவும், கடினக் குரலுடையவராகவும், தரித்திரராகவும், மிகுந்த கோபமுடையவராகவும், மதுபானம் செய்பவராகவும், மாம்ச பக்ஷணம் புசிப்பவராகவும், ஜீவ ஹிம்சை செய்பவராகவும், துஷ்ட சகவாச முடையவராகவும், நீசத் தொழில் செய்பவராகவும், கஷ்டத்தின் மேல் கஷ்டமனுபவிப்பவராகவும், கட்டளையாகவும், திருடராகவும், ராஜ தண்டனை அடைந்த (அடையக் கூடிய) வராகவும், சதா துக்கத் தோற்றத்துடன் இருப்பவராகவும், அங்க ஹீனராகவும், ஸ்ரீ கிருஷ்ண பிரானின் ஜன்ம ஸ்தானத்தில் (ஜெயிலில்) குற்றவாளியாகவும், அல்லது உத்தியோக முடையவராகவும், சந்தேக முடையவராகவும், வெட்கம் கெட்டவராகவும், வீண் வார்த்தையாடுபவராகவும், வாத சம்பந்தமான வியாதியுடையவராகவும், இரும்பு, ஈயம் முதலிய வியாபாரங்கள் செய்பவராகவும், அல்லது தொழிற்சாலையில் உத்தியோக முடையவராகவும் இருப்பார்கள். (சனி மேட்டிலுள்ள ரேகைகளின் பலன்களைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்.)

(தொடரும்)

---

**குறிப்பு:**—(1) சூரிய ஆட்சி உடையவர்களுக்கு எல்லா நற்குணங்களும் அமைய வேண்டி இருக்க, சூரிய ஸ்தானத்தில், ஏதாவதொரு கெடுதலைக் குறிக்கும் ரேகை இருந்தால் மேற்படி நற்குணங்கள் மாறித் துர்க்குணங்களுண்டாகும்.

(2) சனி ஆட்சி உடையவர்கள் தரித்திரமுடையவராய் இருப்பாரெனக் குறிப்பிட்டோம். ஆனால், தன ரேகை நன்கு அமைந்திருந்தால் தரித்திரம் போய்ச் செல்வந்தர்களாவார்கள்.

இவ்வாறு கிரக ஸ்தானத்தை மாத்திரம் ஆராய்ந்து பலனை நிர்ணயிப்பதால் சில தவறுதல்கள் ஏற்படும். ஆதலால், வாசகர்கள் கிரக ஸ்தான ரேகைகள், மற்ற ரேகைகள் எல்லாவற்றையும் ஆராய்ந்த பிறகே பலனை நிர்ணயித்தால், நிச்சயமாய் நமக்கு நடக்கக்கூடிய பலனைத் தெரிந்து கொள்ளலாம்.

சிலருக்கு இரண்டு, மூன்று கிரக ஆட்சிகளும் இருப்ப துண்டு. அவ்வாறு இருக்கும் சமயங்களில் எந்தக் கிரக ஆட்சி அதிக வலுவுடன் இருக்கிறதோ அந்தக் கிரக ஆட்சிக்கு முக்கால் பங்கு பலனும், மீதி கால் பங்கிற்கு மற்ற கிரகங்களின் பலனையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

# விஞ்ஞானம் விதியியல் சிறப்பெய்தல்

டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ.



எண்களையும் வரி வடிவங்களையும் பற்றி யூட்ரக்ஸ்ஸ் என்ற கிரேக்கர், சீர்திருத்தமான முறையில் நன்கு ஆராய்ந்தார். ஆயினும், அவை அறிவியல் நூலென்ற நன்மதிப்பைப் பெறாதிருந்தன. எண்நூல் தலையாய இடம் பெறாதிருந்தது. அறிவியல் முறையென, அவை மேன்மை யடையாவிடினும், மக்கள் வாழ்க்கையில், அவை, புகலாயின. ஹிப்போடாமஸ் என்றவர் போன்ற ஆர்வமிக்க பைதாகிரிய சிற்பாசாரிகள் எண் நூலின் துணை கொண்டும் வரிவடிவ நூல் முறையைப் பின்பற்றியும், திட்டமான நகர வமைப்பு வழிகளைக்கண்டு பிடித்தனர். உறுதியாயும், அழகாயும் கட்டப்பட்ட வீடுகளையும், நேராயும் ஒழுங்காயும் அமைக்கப்பட்ட வீதிகளையும், கொண்ட புது நகரங்கள் பலவற்றை, அவர்கள் நிறுவலாயினர். அப்படி, அவர்கள் நிருமித்த நகரங்களில், பிராயஸ் என்பதொன்று. பிற்பட்ட காலத்தில் நிறுவப்பட்ட அலெக்ஸாண்ட்ரியா, பாம்ப்பே என்ற நகரங்களும், ஹிப்போடமஸூம் அவரைப் பின்பற்றிய சிற்பாசாரிகளும் காட்டிய வழியைப் பின்பற்றியே கட்டப்பட்டவை. தற்காலத்தில் புகழ்பெற்று விளங்கும் நியூயார்க், என்ற அமெரிக்க நகரம், பைதாகிரிய சிற்ப முறையை யொட்டியே யுள்ளது, என இக்காலத்து நகரவமைப்பு நிபுணர் சொல்கின்றனர்.

சிலைச் சிற்பிகள், மனித உடலின் உருவமைப் பியலைப்பற்றி, வரிவடிவ நூலைக் கொண்டும், எண் நூலைக் கொண்டும், ஆராயலாயினர். அக் காலத்திற்குப் பின்னரும், எண் நூல் துணை கொண்டு தம் பணி யாற்றிய நுண்கலையாளர் பலர் இருந்து வந்துள்ளனர்.

பார்மெனிடிஸ் என்ற தத்துவ நூலறிஞர், இவ்வுலகில் ஏற்படும் மாறுதல்களுக்குக் காரணம் கூற முற்பட்டார். உலகிலுள்ள யாவும் நிலையான அடிப்பொருளாலானவை எனவும், புலன்கள் வாயிலாய் அறியப்பட்ட யாவும் மாயையால் மறைக்கப்பட்டுள்ளன வெனவும் அவர் தம் கருத்தை யுரைத்தார். இம் மாயையே நிலையாயுள்ளவற்றை மாற்ற முள்ளவையான தோற்றத்துடன் நமது புலன்கள் வாயிலாய் அறியப்படுத்துகின்றதென்பது, இவ்வுலகில் இடையறாது நடைபெறும் மாறுதல் காணப்படுதற்கான காரணம் என, அவர் கூறினார். தக்க முறையில் தார்க்க ரீதியாய், அவர், தம் கருத்தை நிலைநாட்ட முயன்றாரெனினும், அக் கருத்தை ஒப்புக்கொள்ள, மக்கள் பலரும் மறுத்தனர். மந்திரத்தில் நம்பிக்கை கொண்ட மேன்மக்களுங் கூட, அநுபவத்திற்கு முற்றும் முரண்பட்டதா யிருந்த பார்மெனிடிஸின் கருத்தை யேற்க முன் வராது தயங்கினர். மாயை யென்ற கருத்தின்பாற் பட்டதும், அனுபவத்தை யொட்டி யுள்ளதுமான

காரணங்களைக் கொண்டு, இவ்வுலகில் ஏற்படும் மாற்றங்களை விளங்கச் செய்யும் வழியையே, தத்துவ ஞானிகள் பலர், சிந்தனை செய்ய முற்பட்டனர்.

க்ரேர்டன் நகரவாசியான ஆல்கிமியான் என்பார், புலனறிவு என்பது உண்மையேயென்பதை எடுத்துக்காட்டும் முகத்தான், மனித உடலை வெட்டிப் பகுத்துப் பரிசீலனை செய்யும் சோதனைகளில் இறங்கினார். தம் சோதனையால், கண்ணினின்று மூளைக்குச் செல்லும் ஒளியுணர் நரம்பொன்றுள்ளதைக் காட்டினார். புலனுணர்ச்சி யென்பது மாயையினால், கண்ணிற்கும் மூளைக்குமிடை தொடர்பு இருத்தல் அநாவசியமென்றும், அவ்வாறான தொடர்பு உண்டு என்பதைத் தெளிவாய்க் காட்டும், உணர்ச்சி நரம்பொன்றிருத்தலே,புலனுணர்ச்சி மாயையன்று என்பதைத் தெற்றெனத் தெரிவிக்கின்ற தெனவும், ஆல்கிமியான் எடுத்துரைத்தார். மூளையே எல்லா வகையான புலனுணர்ச்சிக்கும் நடுவான ஆதார வுறுப்பு என்பதையும் அவர் தம் சோதனைகள் வாயிலாய் நிலை நாட்டினார்.

எம்பிடாக்ளிஸ் என்ற அறிஞர், இவ்வுலகில் நேரிடும் நிகழ்ச்சிகள் பலவாறான வகைகளில், இருப்பதற்கான தான காரணத்தைக் கூறும் கருதுகோளை வெளியிட்டார். உலக நிகழ்ச்சிகளுக்கு எல்லாம், மண்-காற்று-தீ-நீர் என்றவற்றினியலான அடிப்படைப் பொருள்கள் நான்கே காரணமானவை யெனவும், அவற்றினிடை நட்பியலானவும், பகையியலானவும் ஆன தொடர்புகள் உண்டெனவும், அத்தொடர்பை முன்னிட்டு ஏற்படும் பல்வேறான விளைவுகளே, பல வகையான இயற்கைத் தோற்றங்களுக்கான காரணங்கள் எனவும், அவர் கருதினார்.

• இதற்கு முன்னரே, அனெக்ஸமாண்டர் என்பார், சில உயிரினங்கள் சிறத்தலால், வேறு பல புத்தினங்கள் எழுகின்றன என்ற கருத்தை அடிப்படையாய்க் கொண்ட பரிணாமக் கொள்கையை வெளியிட்டிருந்தார். எம்பிடாக்ளிஸ், அனெக்ஸ்மாண்டரின் கொள்கையை, மேலும் விரிவானதாய்ச் செய்தார். லுக்ரீஷயஸ் என்ற பேரறிஞர், இப்பரிணாமக் கொள்கையின் பாற்பட்ட முறையில், புத்தினங்கள் எங்ஙனம் தோன்றுகின்றன வென்பதைப் பற்றியும், அவற்றில் சில எவ்வாறு குறைபாடுகளுடன் பிறந்து, இரைதேட இயலாமையின் உணவு பெறாது வருந்தி, வளர்ச்சியுறாதும், இனப்பெருக்கம் செய்யாதும் இறந்தழிகின்றன என்பதைப் பற்றியும், சில வினங்கள் வாழ்வதற்கேற்ற வாய்ப்புகள் பெற்று வாழ்ந்து பெருகி சிறக்கின்றன வென்பதைப் பற்றியும், விரிவான முறையில் விவரணை செய்தார்.

எம்பிடாக்ளிஸ் விதியியலான விஞ்ஞானத்தைப் பெருக்கியதுடன் நில்லாது, சோதனை யியலான விஞ்ஞானத்திலும் சிறப்புற்றார். நீர் வடிவதால், நாழிகை கணக்கிடும், நாழிகை வட்டிலைத் திருத்தமான வகையில் அமைத்தார். அந் நாழிகை வட்டில்,

அடிப்புறத்தில் சிறு துளை கொண்டதும், சல்லடைக் கண்கள் போன்ற சிறு ஓட்டைகளுடனுள்ள மேல் மூடியைக் கொண்டதும் ஆன நீண்ட குழலேயாம். அக் குழலில் நீர் நிரப்பி, அதனை மற்றொரு கலத்திலுள்ள நீரினுள் மூழ்க வைத்தார். அக் குழல் நீரிலுள்ளபோது, அதன் அடியிலிருந்த துளையை விரலால் அடைத்துக் கொண்டு, பின்னர் குழலை நீரினின்று தலை கீழாய் (அதாவது, துளைப்புறம் மேலிருக்கும்படி) வெளியில் எடுத்தார். அங்ஙன மெடுத்தபோது, அக் குழலினுள்ளிருந்த நீர், அதன் கீழ்ப்புறத்தில் இருந்த குறுங் கண்கள் வழியே வழிந்தோடவில்லை. இச் சோதனையைச் செய்ததினின்று, எம்பிடாக்ளிஸ், காற்று என்ற ஒன்று உள்ள தெனவும், அது நீர் கீழே விழாதவாறு தாங்குதற்கான வலிமையுடனுள்ள தெனவும், அவ் வலிமைக்குக் காரணம் காற்றின் அமுக்கமே யெனவும் முடிவு கட்டினார். கட்புலனுகாததும், தொட்டுணர இயலாததும், ஆன காற்று உள்ள தொன்றே யென ஏற்பட்டது. அப்படியிருக்கும் போது, புலன்களாலும் அறியக்கூடியவை இல்லாதவை யெனவும், மாயையானவை யெனவும் எண்ணப்படுதல் சரியன்று என, அவர் தெளிவுறுத்தினார். இதனால், பருப்பொருள்கள் உள்ளனவையே யென்ற கொள்கை, நன்கு நிலை நாட்டப்பட்டது.

பார்மெனிடிஸ், இவ்வுலகெலாம் மாயையே யென்று தர்க்க ரீதியாய் விளக்க மாக்கிய கொள்கையை, எம்பிடாக்ளிஸ் எதிர்த்து, பருப்பொருள்கள் என்பவை உள்ளனவையே யென்ற கொள்கையை, தக்க அரண் கொண்டு, நிலை நாட்டினார். எம்பிடாக்ளிஸின் கொள்கையே சரியானது என்பதை எடுத்துக் காட்டுதற்கான ஆதரவுகள் மேலும் கிடைக்கப்படலாயின. ல்யூகிபஸ் என்ற மைலேடிய நகர யவனர், பார்மெனிடிஸ் கூறியவாறு, எல்லாவற்றிற்கும் மூலமான அடிப்பொருள் இருப்பது உண்மையேயென ஒப்புக் கொண்டார். ஆனால், அவ்வடிப் பொருள் மாயையானது என்ற கருத்தை யேற்க மறுத்தார். ஒன்றுமில்லாத வெட்ட வெளியினில் அடிப் பொருள், பல்வேறான வகையிலும், பலதிற அமைப்புகளிலும், பலவாறான தொகைகளிலும், சேர்வதால் உண்டான பருப்பொருள்கள் ஆங்காங்கே உண்மையில் உள்ளன வென அவர் உரைத்தார்.

இவ்வாறு, பருப்பொருள்களின் மூலக் கூறுகளா யுள்ளவை அணுக்கள் எனப்படுகின்றன. அவை என்றும் அழியாத வியலானவை யெனவும், அவற்றைவிட மூலமான கூறுகள் இல்லை யெனவும், அவை வேறு இயலானவையாய் மாறாதவை யெனவும், அவர் கருதினார். மூலக் கூறுகள் அல்லது அணுக்கள், பலவகையான வழிகளிலும், பலவாறாகவும், பலவினவாகவும் கூடுவதாலேயே, பலதிறப் பருப்பொருள்களும் ஏற்படுகின்றன வென்னவும், இவ்வுலக நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன வெனவும், ல்யூகிபஸ் காரணங் கூறினார். ல்யூகிபஸ் வெளியிட்ட கொள்கையே, இன்றும் விஞ்ஞானத்தின் அடிப்படையான கருத்துக்

களில் ஒன்றாயுள்ளது. ல்யூகிபஸின் கொள்கையைப் பின்பற்றிய வழியில் சிந்தனை செய்து, டிமாக்ரிடிஸ் என்ற ஆப்தார் நகரத்து திரேசியர், மேலும் விரிவான அணுவியல் கொள்கையை வெளியிட்டார். அக் கொள்கையின் பாற்பட்ட கருத்துக்களில் முக்கியமானவை பின்வருமாறானவையாம். "இன்மையினின்று, உள்ளவொன்றை உண்டாக்க இயலாது. உள்ளவொன்றை, இன்மையாகும்படி அழிக்க இயலாது" என்பது ஒரு கருத்து. "அன்று நடைபெற்றவையும், இருந்தவையும்,—இன்று நிகழ்பவையும் இருப்பவையும் நாளை நேரிடப் போகின்றவையும், இருக்கப் போகின்றவையும், என்றயாவும், என்றும் மாறாத இயற்கையின் விதி முறையின் பாற்பட்ட ஒழுகலாற்றை யொட்டியே யுள்ளவை" என்பது மற்றொரு கருத்து. டிமாக்ரிடிஸின் கொள்கையின் பாற்பட்ட முக்கியமான கருத்துக்களே, இன்றைய விஞ்ஞானத்திலும் அடிப்படையானவையாயுள்ளன. அன்று, டிமாக்ரிடிஸ் இயற்கையின் ஒழுகலாற்றை எடுத்துக் காட்டும் கொள்கையை, தம் அறிவின் துணைமட்டும் கொண்டு, விவரித்தார். அவர் கொள்கை, உண்மையான தொன்றேயென இன்று, அவர் காலத்திற்கு இரண்டாயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னர், சோதனை முறையாலும் அரணாக்கப்பட்டு, உறுதியுடன் நிலைநாட்டப் பட்டுள்ளது. ல்யூகிபஸும், டிமாக்ரிடஸும், அவரது கொள்கைகளின் பாற்பட்ட மூலக் கருத்துக்களை, அவரது சிந்தனையறிவு கொண்டு மட்டும் அடையவில்லையெனவும், நமது இந்திய நாட்டுப் பேரறிஞரான 'கண்டா' என்பாரும், இன்னும் மற்றோரும் வெளியிட்ட கருத்துக்களைப் பற்றிக் கேள்விப் பட்டதை ஆதாரமாய்க் கொண்டு மேலும் சிந்தனை செய்ததினாலேயே, அக் கருத்துக்களைப் பற்றி அவர்கள் எண்ண நேர்ந்ததெனவும் கருதற்கு இடமுண்டு.

மேற்கூறிய வகைகளில், இக்காலத்து விஞ்ஞானத்தின் அடிப்படையான கருத்துக்கள், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே, நிலைநாட்டப் பட்டன. ஆயினும், அவை, சோதனை வாயிலாய்ப் பரிசீலனை செய்யப்படவில்லை. பல தொழின் முறைகளின் பாற்பட்ட அறிவையும், மேற்கூறிய வகையான விஞ்ஞான அறிவையும், ஒன்றிட்ட வகையில் சிந்தனை செய்ததாலேயே, விஞ்ஞானமும் விரிவடைந்தது; தொழில் முறைகளும் சிறந்தன. இற்றை விஞ்ஞானீய தொழின் முறைகளின் விளைவுகள் குவியலாயின. ஆனால், இந்நிலைமை யேற்பட்டுள்ள மேல் நாடுகளில், பொது மக்களின் வாழ்க்கை மட்டும் நலம்பெற்று வளமுறாதுள்ளது. நகரவியல் வாழ்க்கை ஆரம்பமான காலத்தில், எல்லா மக்களது நலத்தையும் கருதுமாறான, பொது வறநெறி முறை நிறுவப்படவில்லை. தமது தோள்வலியாலும், படைத்துணையாலும், வணிகத் திறனாலும், மந்திரத்தின் பெயர் தந்த வலிமையாலும், பொதுமக்களை ஆக்கிரமித்தவரே, பெருமக்களாயினர். அம்முறையைப் பின்பற்றியே, இன்றும், உலகவியலான நெறியுள்ளது. (தொடரும்.)

# சிலப்பதிகாரம் பெருங் காப்பியமே

## வித்துவான் — எம். சாம்பசிவம்



"நுண்ணிய நூல்பல கற்பினும், மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்!"

என்பதை ஆச்சாரியாரின் "ஓநாயும், ஆட்டுக் குட்டியும்" என்னும் உவமை, நன்ருக விளக்கிக் காட்டுகிறது. தவிரவும், அவருடைய ஒவ்வொரு கேள்வியும், அதை மேலும் உறுதிப் படுத்துவதோடு, மேலும், அவர் முறையின்றித் தாறுமாருகப் பயின்று, குழம்பி யிருக்கிருர் என்பதையும் வலியுறுத்துகின்றன : ஊழ்வினை, அவரைத் தெளிவிப்பதாக!

"ஊழிற் பெரு வலி யாவுள" என்பதின் துவனிப்பொருள், 'ஊழ், முதுகு காண்டலில்லை' யாயின், "ஊழையு முப்பக்கங் காண்பர்" என்பதன் துவனிப் பொருள், இன்னது என்று அறிவாரா, ஆச்சாரியார்? 'உப்பக்கம்' என்பது, 'புற முதுகு'தான் என்பதை ஆச்சாரியாருக்கு நினை வூட்டுகிறேன்; அறிக.

தமிழ் வீரர்கள், 'தமிழ், தனிமொழி' என்பதில் யாதொரு மயக்கமும், எக்காலத்துங் கொண்டார்க ளில்லை; தமிழர்கள் எக்காலத்தும் அநாவசியமாக 'மார்தட்டி' வீண்கர்வம் அடைவதில்லை. இப்படித் தவருக ஆச்சாரியார் நினைத்து விட்டதற்குக் காரணம், தமிழரின் மரபை ஓரளவும் அறிந்து கொள்ளாமைதான்; இனியாகிலும் ஆழ்ந்து ஆராய்ந்து அறிவாராக.

'ஊழ்', 'வீடு' என்பன போன்ற பதங்களின் நுணுக்கத்தை அந்தரங்கத்தை எள்ளளவும் கருதாமல், பரிமேலழகர் உரையை உருப்போட்டுக் கொட்டினுல் பயனேயில்லை என்பதும், குப்பைக் கருத்துக்களைக் 'கடாமுடா' கடையில் சொற்பந்தல் போடுவது நகைப்பைத் தரும் என்பதும் குசிலிக் கடைப் புத்தகக் கேள்விகள் கரிமலவாயு வாகிவிடும்' என்பதும், தேவைக்கு மிஞ்சி எடுத்துக் காட்டுகளை உபயோகித்தால், 'கழற் பெய் குடமாக அவை, செய்துவிடும் என்பதும் ஆச்சாரியார், அறியாதவை போலும்!

'உலகத்தே மழை பெய்வதும், வெயில் காய்வதும் அந்தந்த நிலப் பகுதியின் ஊழ்வலியே யாகும் என்று, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், ஒரு 'கர்நாடகம்', சொன்னதனுல், ஊழே வெயிலுக்கும், மழைக்கும் காரணம் என்று, யாவரும் சேர்ந்து கத்தமாட்டார்கள் என்பதை ஆச்சாரியார், அறியட்டும்.

காய்தல் உவத்தலகற்றி, ஊழ் என்னும் அதிகாரத்திலுள்ள பத்துக் குறட்பாக்களையும் பரீட்சைக்கும், விதண்டாவாதங்களுக்கு மன்றி, வாழ்க்கைக்காக—சமூக சேவைக்காக, சிறந்த தத்துவ விசாரணையோடு, ஆச்சாரியார், ஆழ்ந்து சிந்தனை செய்யட்டும். பரிமேலழகர் உரையைப் பன்முறை கெட்டுருப் போடுவதில் பயனே இல்லை யென்பதை அப்பொழுதுதான் உணரமுடியும். ஊழைப் பற்றி நன்ருகத் தெரிந்துகொள்ளாததால்தான் ஆச்சாரியார், பல நூல்களிலேயும், உரைகளிலேயும் விழுந்து புரண்டு, ஆதாரங் காட்ட முயன்று, முடிவில், 'குன்று முட்டிய குரீஇப் போல்' கின்ருர் போலும். ஊழைப் பற்றியே சிந்திக்காமல், சிறந்த ஒருவன், மன வலியாலும், வாக்கு வலியாலும், உடல் வலியாலும் ஒரு இலட்சியத்தை மேற்கொண்டால், அவன், அதில் வெற்றியே பெறுவான்! ஊழைப் பற்றியே

சிந்தித்துக் கொண்டு, தூங்கி வழிந்து கொண்டு அழுபவன், கூழாகிவிடுகிறான். இலட்சியம் உண்மையானால், அலட்சியம் பறந்து விடும்; இலட்சியமே இல்லாத பேர்வழி களுக்கு எதைப் பற்றித்தான் கவலை? ஊழைப் பற்றித்தான்!

இராவணன் இலட்சியம் முற்றுப்பெற்றதா? என்பது ஆச்சாரியாரின் கேள்வி.

அதில் ஏன், சந்தேகம்? முற்றுப் பெறாமல் என்ன? வண்ணான் சொன்ன கதையை ஆச்சாரியார் இன்னும் அறியவில்லையா? ஆகவே, ஊழ், எல்லோரையும் கூழாக்காது! ஊழின் அடிமைகளைத்தான், ஊழ், கூழாக்கும்!

சிலம்பில், முக்கிய உறுப்பினர்களுக்கு ஊழ் கூறாது விட்டதேன்? என்பது ஆச்சாரியாரின் மற்றொரு கேள்வி. இதற்குப் புரட்டாசி மாத இதழில் பதில் இறுத்திருக்கிறேன்; தவிரவும், பானைச் சோற்றில் ஒரு சோறு, பதம் பார்க்கப் படுமே தவிர, ஆச்சாரியார் விரும்புவதுபோல், பானை சோறும் பதம் பார்க்கப்படா; பார்க்கப்படலாம்; பயன்?......சொல்லவேண்டுமா?

'மனத்துக் கெட்டாத-ஊழ்!' என்பது, ஆச்சாரியாரின் முடிவு! பிறகு, எட்டுமாறு நூற்கள் எப்படி எடுத்துக் கூறுகின்றன? நூற்கள், வானத்திலிருந்து விழுந்தவை என்று நினைக்கிறாரா, ஆச்சாரியார்? அப்படிப் பலபேர் நினைப்பதால் தான் உலகம், தலைவிரி கோலமாகத் திரிகின்றது.

இராமாயணம், கதையால்—பாடுபடவில்லை! அது, இராமனைக் 'கடவுளே' என்றும், தமிழர்களை 'இராட்சசர்களே; குரங்குகளே' என்றும் கயிறு திரித்திருப்பதால் படுகின்றது, பாடு! அப்பாட்டை ஆச்சாரியார், அறிந்திலரோ? "இலவம் பஞ்சு போன்ற" சிலப்பதிகாரத்தைக் காற்று, தூக்கிக் கொண்டு பறக்கும்போது, எருக்கம் பஞ்சு போன்றவர்கள், துருவித் துருவி அதை ஆராய்ந்து கொண்டே, தொங்கி வருந்த ஏன் அதைப் பின் தொடர்ந்து ஓடவேண்டும்? பிரபு லிங்க லீலையையே 'உண்மைக்கதை' என்று சொல்லிக்கொண்டு இருக்கட்டுமே.

அவர்—கேள்வி: மாதவி இல்லையானால், கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிவதேது? மதுரைக்குச் செல்வதேது? கொலை யுண்ணுவது ஏது? ஆதலால், மாதவிக்கு ஊழ் கூற வேண்டும்; இல்லையேல் உப்பில்லாத உணவு போலும்!

என்-பதில்: சிலம்பு இல்லையானால், மாதவியை விட்டுப் பிரிவதேது? மதுரைக்குச் செல்வதேது? கொலையை 'தின்னு' வது எப்படி? ஆதலால், சிலம்புக்கும் 'ஊழ்' கூற வேண்டாமா? இல்லையேல், "மிளகாய் இல்லாத (!) மைசூர் பாகு" போன்றதாகுமே! மாதவி, உணவா? ஊழ், உப்பா? பொதுத் தன்மை?......இது, ரசமா, விரசமா?

ஆகவே, சிலப்பதிகாரத்தின் 'தலைவிதி' பெருங்காப்பியமென்றே இருக்கிறது; அதைச் சுவைப்பவர்களின் தலைவிதி தான் நன்றாயமைய நாம் விரும்பவேண்டும்; மற்றபடி எந்த A, B, C, D பட்டதாரியாவது, ஆங்கிலத்தில் நூல்கள் வெளியிட்டு விட்டால், அதற்காக நம் அறிவை நாம் இழக்க வேண்டியதில்லை. ஏனென்றால், திருவள்ளுவர் எதை அறம் என்கிறாரோ, பொருள், இன்பம், வீடு என்கிறாரோ அவற்றை எல்லாம் கோவலன், கண்ணகியாகிய இருவரும் அடைந்திருப்பதாலும் மற்றைய வருணனைகள் யாவும் பொருந்தி யிருப்பதாலும் 'சிலப்பதிகாரம், பெருங்காப்பியமே.'

கோவலன் நன்மனை புணர்ந்து, மக்களைப் பெற்று, தீ மனை புகாமல், மணிமேகலையைப் பெறாமல் இருந்திருந்தால், பிறகு, சிலப்பதிகாரம்தான் வந்திருக்குமா? மணிமேகலைதான் தோன்றி இருக்குமா? அவைகளைப் பற்றிக் கூசாமல்தான் 'கற்பனை' என இயலுமா? கற்பனையைக் கற்பனை யென்பதே வேலையற்ற வேலையாயிற்றே; வீண்பிடிவாதம், மாறான பலனைத் தருமே!

ஆகவே, இளங்கோவடிகள், இல்லாத—நடவாத ஒன்றைச் சரித்திரம் என்று கற்பிக்கவில்லை. தம் காலத்தில் நடந்த ஒன்றையே—அதாவது, சாத்தனார், மதுரையில் நேரில் கண்டுவந்து தம்மிடம் கூறியதையே சிலப்பதிகார மாக்கினார். அதில் கற்பனையாக இருப்பவை, அணிவகைகள்; அலங்காரங்கள். மத்தியபாகம், சிலம்பு-சம்பவம், கோவலன்—கண்ணகி வரலாறு, அதாவது பாவிகம், உண்மையே; மையப் பொருள், நிஜமே. அவற்றை, ஆச்சாரியார் பொய்யென்றால் பொய்பராகலாம்; கற்பனை யென்றால், முதலில் அவரே கற்பனைதான்.

இராமாயணம், மொழி பெயர்ப்பு நூல்; வழிநூல்; சிலப்பதிகாரம், அப்படிப் பட்டதல்ல; மூல நூல்; முதல் நூல்; நம் நூல்; நம்மொழி நூல்! அதனால் அது, நம் சிம்மாசனத்தி லிருக்கத் தகுதி வாய்ந்ததே; இராமாயணம் அம்மிக் குழவியும் ஆகலாம்; காற்றிலும் பறக்கலாம்; அது, நூலாகவே இருந்தால், சுவைப்பதோடு நிறுத்திக் கொள்ளலாம். ஆகவே, அவ்விரண்டு நூற்களையும் ஒப்பு நோக்குவது, ஆபத்து பெருந் தவறு.

அன்றியும், எந்த நூல்களுமே, காப்பியங்களுமே மனிதனை—அவன் அறிவைக் குறிப்பிட்ட ஓர் எல்லை வரையிலுமே வளர்க்கின்றன. அந்த எல்லையை அறிவு, தாண்டி விடுமானால், பிறகுதான் உண்மையாகத் தன்னை அறிகிறான்; உண்மையான உலகத்தை யறிகிறான், மனிதன்; பிறகு வீடுபேற்றுக்குந் தகுதியுடையவனாகி விடுகிறான்.

இதனால், எந்த நூற்களுக்கும், காப்பியங்களுக்கும் பெயர்ச்சியற்ற வரம்பு கோலுவது, பெருந்தவறு என்று ஆகிறதல்லவா? வரம்பு (நூல் இலக்கணம்) இருக்கவேண்டியதே; ஆனாலும், அது, இயற்கையை யொட்டியதாக இருக்கவேண்டும்; இன்றேல், வரம்பிற்கே திண்டாட்ட மேற்பட்டு விடுமல்லவா?

உலகில் கோடிக்கணக்கான மக்களிருந்தும், ஒருவரைப்போ லொருவரில்லை; இருப்பினும், நுட்ப வேறுபாடுகள் பல இருக்கின்றன. ஒருவனைக் குறிப்பிட்டு, அவனை யொத்தவர்கள் மனிதர்கள் ஒவ்வாதோர் மனிதர் ஆகார் என்றால், அதில் எவ்வளவு நியாயமிருக்குமோ, அவ்வளவு நியாயந்தான் பெருங்காப்பிய இலக்கணத்தைக் கையில் வைத்துக் கொண்டு காப்பியங்களை யெல்லாம் அணு அணுவாக அளந்து பார்ப்பதிலும் இருக்கிறது.

"மொழிப் பொருள் காரணம், விழிப்பத் தோன்றா"

எனினும், 'ஊழ்' என்ற சொல்லின் வேகத்தை நாம் உணராமலில்லை; ஆனால் அதைத் தப்பர்த்தம் செய்து கொண்டு, அதுவே உயிர்களை ஊக்குகிறது; உலகத்தையும் ஊக்குகிறது என்று பெருமையாகச் சொல்லி, அதைக் கட்டிக்கொண்டு அழுவதுதான், நாம் புறக்கணிக்கவேண்டிய செயல். மேலும், இந்தச் சொல்லுக்குச் சமமான நம் ஊக்கத்தைக் குறைக்கும் வட சொல் ஒன்று இருக்குமானால், அது, அதிர்ஷ்டம் தான்! இந்த அதிர்ஷ்டமும், ஊழும் எவற்றை நோக்கிக் கற்பிக்கப் பட்டனவோ, அவற்றிற்கே அவை

பயன் படலாமே தவிர, எடுத்ததற்கெல்லாம் அவற்றைப் பூசை பண்ண வேண்டியதில்லை; ஏனென்றால், நம் தீச்செயலும், சோர்வுந்தாம் பிற்பாடு 'போ கூழ்' என்றும், 'துரதிர்ஷ்டம்' என்றும் பரிணமிக்கின்றன. நம் நற்செயலும், விடா முயற்சியுந்தாம் பிற்பாடு 'ஆகூழ்' என்றும், 'அதிர்ஷ்ட' மென்றும் சொல்லப் படுகின்றன. ஆகவே, 'ஊழ்' என்று வானத்தைப் பார்த்துக் கொண்டு நின்றால், 'போ கூழ்' அன்றோ, ஜனிக்கின்றது? அதற்காகத்தான் ஊழ் என்பதையே புறக்கணித்து, அதாவது இலட்சியத்தைக் கவனிப்போமானால், தானே—ஆகூழ், தாயைத் தொடரும் கன்றுபோல் இலட்சியத்தைத் தொடர்கிறது.

எனவே, ஊழ் என்பது இன்னது என்று நிலையாக ஆச்சாரியார் தெரிந்திருப்பாரானால், 'ஊழ்-உதவுகிறது.' என்று கூறிய தவறை நன்கு உணர்வார்.

ஊழைப் பற்றி இதுகாறும் திருவள்ளுவர் கருத்தையே கூறினேன்; பரிமேலழகர் கருத்தையல்ல; அவர், தவறுகிறார். தவறலாம்! நமக்குத் திருவள்ளுவர் கூறிய மற்றொரு யோசனையையும் இங்கு குறிப்பிடத்தான் வேண்டும்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்,
அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு!"

என்பதே அது. இக்குறள், ஒவ்வொருவருக்கும் எவ்வளவு தன்னம்பிக்கையை ஏற்படுத்துகிறது! என்பதை ஆச்சாரியார் அறிவாரா? அறிவாரானால், 'குப்பை மேற்கோள்'களை ஏன், வாரி வாரி வழங்க ஆரம்பிக்கிறார்; சொந்தச் சரக்கையே வழங்கட்டும். நெட்டுருவற்ற சொந்தச் சரக்கு அவரிடம் இருக்குமானால், சிலப்பதிகாரம் பெருங் காப்பியமென்பதில், மறு முயற்சியின்போது, ஐயத்தின் நீங்கித் தெளிவாராக. ஐயமிருப்பினும், அறிஞர்களைக் கொண்டு தேறுவாராக; ஆனந்தபோதினியிலும் வரைவாராக.

---

## ஞாபகப்படுத்த உபாயம்

"ஆமாம்! உங்கள் மனைவி மட்டுமல்ல, என் மனைவியும் அப்படித்தான். ஞாபக மறதி என்பது ரொம்ப ஜாஸ்தி. அதற்கு ஒரு வழி கண்டு பிடித்தேன்."

"என்ன வழி?" என்று மற்றவர் ஆவலுடன் கேட்டார்.

"அவள் என்னென்ன ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டுமோ அதை எழுதி அவ்வப்பொழுது அவள் முகம் பார்க்கும் கண்ணாடியில் ஒட்டி விடுவேன்."

* * * *

## மனைவியின் சமர்த்து

"இந்த வேடிக்கையைப் பார்த்தாயா? அடி முட்டாள்களுக்கெல்லாம் அழகான மனைவி வாய்த்து விடுகிறார்கள்" என்றார் ஒரு பெரியார்.

"ஏன் இப்படி அடிக்கடி என்னைப் புகழ்கிறீர்கள்" என்றாள் அவர் மனைவி.

'கிச்சு'

# சிலப்பதிகாரம் பெருங்காவியமா?

வித்துவான்-வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் **P. O. L.**



செந்தமிழ் மிகவும் தொன்மையானது. பல நூற்கள் பன்னெடுங் காலங்களாகத் தோன்றி மறைந்தன. மறைந்தன போக மறையாதன பல. அவற்றுள் இப்போது காணப்படுவன திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, சூளாமணி, குண்டலகேசி போன்ற நூற்களே. அவற்றுள் ஈண்டு ஆராய எடுத்துக்கொண்டது சிலப்பதிகாரம் என்பதாகும்.

இந் நூலை ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று என்றும், நாடகக் காப்பியம் என்றும், உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் கூறுகின்றனர். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐந்து பெருங்காப்பியங்களுள், சிலப்பதிகாரமும் ஒன்று என்று கூறுவார் கூற்றினைச் சிறிது ஆராய்வாம். வடமொழியாளர் தங்கள் மொழியிலுள்ள காவியங்களுள் இரகு வம்சம், குமார சம்பவம், நைஷதம், கிராதார்சுனீயம், சிசுபால வதம் என்பனவற்றைப் பஞ்ச காவியம் என்று வழங்கி வருகின்ற வழக்கினைக் கண்டு, அக் காலத்திலிருந்த சிலர் தமிழிலும் ஐந்து உண்டு என்று கட்டி விட்டனரே தவிர வேறில்லை. நம் தமிழில் எத்தனையோ காவியங்கள் உண்டு.

கவியினால் செய்யப்படுவது காவியம் எனப்படும். அக் காவியம் பெருங்காப்பியம் என்றும் சிறுகாப்பியம் என்றும் இருவகைப்படும். வாழ்த்து, வணக்கம், வருபொருள் என்ற மூன்றனுள் ஒன்று முன் வர நடந்து அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வகை மக்கள் பேற்றினையும் கூறுவதாகித் தன்னிக ரில்லாத் தலைவனை யுடையதாய் ஆக்கப்படுவது பெருங்காப்பிய மாகும். இவற்றுள், அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு பேறுகளும் குறையாமல் வருவதே பெருங்காப்பியத்தின் இன்றியமையாத இலக்கண மாகும். இந்த நான்கு பேறுகளும் கூறப்பெற்றிருந்தா லல்லவோ, சிலப்பதிகாரத்தைப் பெருங்காப்பியம் என்று கூற இயலும்? சிலப்பதிகாரத்தில், அறம், பொருள், இன்பம் என்ற மூன்று பேறுகளே, காவியத்துக்கு இருக்கவேண்டிய மற்றைய உறுப்புக்களாகிய கடல், மலை, நாடு, நகரம், தலைவி, தலைவனாகிய வருணனைகளைக் கொண்டு கூறப்பெற்றிருக்கின்றன.

மேலும், பெருங்காப்பியத்திற் குரிய தலைவன் ஒப்பாரு மிக்காருமற்ற தலைவனாக இருத்தல் வேண்டும். இக் காவியத்தின் தலைவனாகிய கோவலன் தன்னிகரில்லாதவனாக இல்லை. இவன் சமணர்களுள் இல்லற ஒழுக்கத்தை மேற்கொண்ட சிராவக நோன்பினன். என்பது "சாவக நோன்பிகள் அடிகளாதலின்" (கொலைக்களக் காதை-18 வரி) என்ற தொடரால் விளங்குகின்றது. சிராவக நோன்பிகள் அனுஷ்டிக்கவேண்டிய விதிகளோ பல. அவற்றுள் பரத்தையரோடு கூடாமை மிக அவசியமாக அனுட்டிக்க வேண்டிய கரும மாகும். கோவலனோ இதற்கு மாறாக, அங்கிக் கடவுள் முன்னிலையில் மணந்த தன் மனைவியாகிய கற்பிற் சிறந்த கண்ணகியையும் மனையையும் மறந்து, (அரங்கேற்று-175 வரி) அவள் "அம்பெஞ் சீறடியணி சிலம்பொழியவும், மென்றுகில் அல்குல் மேகலை நீங்கவும், கொங்கை முன்றில் குங்குமம் எழுதாமலும், மங்கலவணியிற் பிறிதணி மகிழாமலும்,

கொடுங்குழை காதினி லணியாமலும், திங்கள் வாண்முகம் சிறு வியர்ப் பிரியவும், செங்கயல் நெடுங்கண் அஞ்சன மறப்பவும், பவள வாணுதல் திலகமிழப்பவும், தவள வாணகை கோவலன் இழப்பவும், மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பவும், (அந்திமாலை-47-57) வருந்தி வாடச் செய்ததோடு நில்லாமல் இல்லறத்தான் செய்யவேண்டிய தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் முதலியோரை வழிபடும் கடமைகளையும் நீத்து மாதவிப் பரத்தை வீட்டிலேயே தன்னுடைய வாழ்க்கையைக் கழித்து அவளிடமே மகளையும் பெற்றான். ஆதலின், இவனைத் தன்னிகரில்லாத் தலைவன் என்பது பொருந்தாது.

கோவலன் கண்ணகியோடு செய்த அறமும், அடைந்த இன்பமும், முறையே புகார் காண்டத்தேயுள்ள மங்கல வாழ்த்துக் காதை, மனையறம் படுத்த காதை என்ற இரண்டு காதையாலும், பொருளீட்டச் சென்ற செய்தி புகார்க் காண்டத்தின் கடைசி காதைகளாலும் மதுரைக்காண்டத்தின் முதலிரண்டு காதைகளாலுமே சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும், கோவலன் மாதவிப் பரத்தையை யடைந்து அவளோடு மனையறம் நடத்திய செய்தி; அரங்கேற்று காதை, இந்திரவிழா வூரெடுத்த காதை, கடலாடு காதை, அடைக்கலக் காதை முதலிய காதைகளால் சொல்லப்பட்டிருக்கின்றது. மதுரைக் காண்டத்தின் இறுதிக்கதையாலும், வஞ்சிக்காண்டத்தின் முதற்கதையாலும் (குன்றக்குரவை, காட்சிக்காதை) கண்ணகி மலைமீது ஏறி உயிர் துறக்க, விண்ணிலிருந்து விமானத்தில் வந்த தன்னுடைய கணவனோடு சுவர்க்கம் அடைந்ததாகக் கூறப் பெற்றிருக்கின்றதே யொழிய, அந்தமிலின்பத்தழிவில் வீட்டை அடைந்ததாகக் கூறப் பெறாமையால் வீட்டுப்பேறும் கூறப் பெறவில்லை. இன்னோரன்ன குறைபாடுகளையுடைய சிலப்பதிகாரத்தைப் பெருங்காப்பியம் என்று கூறுதல் பொருந்துமாறு எங்ஙனம்?

மேலும், இந்நூலோடு ஒருங்கு வைத்து எண்ணப்படுவதாகிய மணிமேகலை என்ற நூலிற் கூறி யிருக்கும் மணிமேகலை துறவினையும் கூட்டினால், இவை இரண்டும் சேர்ந்து ஒரு பெருங்காப்பியம் ஆகும். அதாவது அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் சிலப்பதிகாரத்தேயும், துறவின் மூலம், வீட்டினை மணிமேகலை நாலினுள்ளும் கூறுகின்றமையால், இரண்டும் சேர்ந்தே பெருங்காப்பிய மாகுமே யொழியச் சிலப்பதிகார மட்டும் பெருங்காப்பிய மாதல் இல்லை. இவை இரண்டும் சேர்ந்து ஒரு காப்பியமாய் நடைபெறவே இயற்றப்பட்டன என்று இந்நூலின் உரையாசிரிய ராகிய அடியார்க்கு நல்லாரும் பதிகவுரையில் அதாவது உரைப் பாயிரத்தின் இறுதியில் விளங்கக் கூறி யுள்ளார். எனவே, சிலப்பதிகாரம் சோழ, பாண்டிய, சேரரையும் அவர்களுடைய நாட்டையும் முறையே கூறுகின்றது. மணிமேகலையோ பாண்டியனை யொழித்துச் சேரனையும் வஞ்சியையும் சோழனையும் அதுபோது அவளிருந்ததாகக் கூறும் காஞ்சியையும் கூறுகின்றது. இன்னோரன்ன காரணங்களால் சிலப்பதிகாரத்தைச் சிறு காப்பியங்களோடு சேர்த்துக் கூறலாம். இனி, சிலப்பதிகாரம் நாடக காப்பியமாகும் என்பார் கூற்றைக் கவனிப்போம்.

## நாடகக் காப்பியமா?

தமிழ்மொழியில் நாடகக் காப்பியத்துக்குரிய பண்டை இலக்கண நூல் யாண்டும் கிடைத்திலது. வடமொழியாளர் கவிகளால் எழுதப்படும் காவியங்களை எல்லாம் சிராவிய காவியம் என்றும், திருசிய காவியம் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்கின்றனர். காதினால் கேட்டு அனுபவிக்கப்படுவனவெல்லாம் சிராவிய காவியமாம். கண்ணினால் கண்டு களிக்கக் கூடி

யன வெல்லாம திருசிய காவியமாம். திருசிய காவியத்தை ரூபகம், உப ரூபகம் என இரண்டாகப் பிரிக்கின்றனர். அவற்றுள் ரூபகத்தை நாடகம் பிரகரணம், பாணம் முதலிய பத்து வகையாகப் பிரிக்கின்றனர். கவியினு டைய மனோபாவத்தால் கற்பிக்கப் படாததாய்த் தோன்று தொட்டுவரும் சரி தையாகி அரசர்களை யாவது கடவுளர்களை யாவது தலைவர்களாகக் கொண்டு இயற்றப்படுவது நாடகங்களாகும். கவியினுடைய மனோபாவத்தில் கற்பனை செய்யப்பட்ட சரிதையாகி-அதாவது கற்பனை கதையாகி, பார்ப்பனனையோ வணிகனையோ தலைவனுகக் கொண்டு இயலுவது பிரகரணங்களாகும். இவ்விருவகை இலக்கணங்களைக் கொண்டு சிலப்பதிகாரத்தை நோக்கு வோம். இதனுடைய கதா நாயகர்களாகிய கண்ணகி, கோவலன் இருவரும் வணிக மரபினர்கள். அவர்களைத் தலைவர்களாகக் கொண்டு கவியினுடைய மனோபாவத்தில் தோன்றிய கற்பனைக் கதையாகும் இந்நூல். ஆதலால் இதனை இரண்டாவதாகக் கூறிய பிரகரணங்களின் பாற்படுத்திக் கூறுவதே சாலப் பொருந்தும். பிரகரணத்தின் இலக்கணத்திற் கேற்பப் பரத்தை ஒருத்தியும் (மாதவியும்) மற்றொரு முக்கிய உறுப்பினளாவாள். வடமொழி யில் சூத்திரகன் என்ற ஒரு கவிஞன் எழுதிய மிருச்சகடிகை என்ற நாட கத்தின் கதையும் இந்தக் கதையும் ஏறக்குறைய ஒன்றை ஒன்று ஒத்தே யிருக்கின்றது. வடமொழியாளர் அந் நாடகத்தை (மிருச்சகடிகை)ப் பிர கரணத்தின் பாற்படுத்துகின்றார்கள். இதனையே நமது தமிழர்கள் உரை நடைச் செய்யுள் என்றார்கள். எனவே, இந்நூலை உரையிடை யிட்ட பாட்டு டைச் செய்யுள் என்று பதிக மெழுதியவரும் (பதி-86 வரி) கூறியது நாடக நூலே என்று வற்புறுத்த வேண்டியே யாகும் என்பது திண்ணம்.

நிற்க, இந்நூலுள் சேரனது செய்தி கூறும் வஞ்சிக் காண்டமாகிய ஏழு காதைகள் சேர்க்கப்பட் டிருக்கின்றமையால், இது நாடக காப்பியமாகாது என்று கூறுபவரு முண்டு. அங்ஙன மன்று; வஞ்சிக் காண்டம் பின்னரே எழுதி இணைக்கப்பட் டிருத்தல் வேண்டும். ஆதலால், சிலப்பதிகாரம் நாடக வகையிற் சேர்ந்ததே என்ற மற்றுமோர் கூற்றும் நிலவி வருகின்றது. கதை அல்லது காதை என்ற சொல்லே கதைப்பது அல்லது புனைந்து கூறு வது என்று பொருள்படுகின்றது: சிலப்பதிகாரத்திலும் ஒவ்வொரு பகு திக்கும் காதை என்று வழங்கப்பட்டிருப்பதே இதனை வலியுறுத்தும். கவியி னல் கூறப்படுவது காவியம் எனக்கொண்டு இந்நூலை காவியம் என்று கூறுதல் சாலப் பொருந்துமே யொழிய, மேற் கூறப்பட்டிருக்கும் பெருங் காப்பியத்துள் சேராது.

இனி மூன்றாங் காண்ட மாகிய வஞ்சிக் காண்டம், பெரும்பாலும் சேரன் செங்குட்டுவன் என்பவனுடைய வீரச் செயல்களையே கூறுகின்றது. இந்த வஞ்சிக் காண்டத்தின் முற்பகுதிகளாகிய புகார் காண்டம், மதுரைக் காண் டம் ஆகிய இரண்டும் முறையே பத்தும், பதின்மூன்றுமாக இருபத்திமூன்று காதைகளை யுடையன. இந்த வஞ்சிக்காண்டமோ எனில், ஏழு காதைக ளால் ஆகிய சிறிய பகுதியே யாகும். இதில் கண்ணகியின் செய்தி கேட்ட செங்குட்டுவன் வடநாடு சென்று இமயமலையிலிருந்து ஒரு கல் கொணர்ந்து படிவம் செய்து நாட்டிய வீரச் செயலை,

"காட்சி கால் கோ ணீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்."

—(தொல்-புறத்திணை. 60-19-70)

தொல்காப்பியத்தில் வெட்சித்திணைக் குரிய துறை இலக்கணமாகக் கூறப் பட்டிருக்கிறது. இச் சூத்திரத்திற்கு இலக்கியமாக (2) காட்சிக்காதை, (3)

கால்கோட் காதை, (4) நீர்ப்படை காதை, (5) நடுகற் காதை, (6) வாழ்த்துக் காதை என்ற காதைகளோடு குன்றக்குரவை என்ற காதையை முன்னும் வரந்தருகாதையைப் பின்னுமாக அமைத்து ஏழு காதைகளாகச் செய்து வஞ்சிக்காண்டம் எனப் பெயரிட்டார்கள். சிலம்பு காரணமாகத் தோன்றிய கோவலன் கண்ணகி கதை சிலப்பதிகாரம் என்று பெயரிடப்பெற்றது. பெயராளவில் நோக்கும் போது கதை மதுரைக் காண்டத்தோடு முடி வடைகின்றது. அவற்றோடு கற்பனைச் செங்குட்டுவனுடைய கதையைச் சேர்த்து, அவனுடைய பெருமையைக் காட்டுகின்றதே யொழிய வேறில்லை. மேலும் ஆசிரியர் தொல்காப்பியர் கூறிய காட்சி முதலிய இலக்கணங்களுக்கு உரையாசிரியர்கள் ஆண் மக்களுக்குக் கல் நாட்டலை உதாரணமாகக் கூறி யிருக்கிறார்கள். ஆனால், வஞ்சிக்காண்ட காட்சி முதலிய துறைகளுக்கு, கணவனைக் கொன்ற பாண்டியனாரையும் கொளுத்திய வீரப்பெண்ணுக்குக் கல் நாட்டியமை கூறப்பெற்றிருக்கின்றது. இந்த நூலைத் தவிர வேறு எந்த நூலிலும் பெண்களுக்குக் கல் நாட்டியதாகக் கூறப்படவேயில்லை. இச் செய்தி கூறுவதில் இதுவே முதல் நூலாகும்.

மேலும், காட்சிக் காதையில் கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியும், முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை மதிமுடிக்களித்த மகட்பாற் காஞ்சியும், தென்றிசை என்றன் வஞ்சியொடு வடதிசை நின்றெதிருன்றிய நீள்பெருங் காஞ்சியும், கொடை நிலை வஞ்சியும் வென்றோர் விளங்கிய வியன்பெரு வஞ்சியும், பின்றாச் சிறப்பின் பெருஞ் சோற்று வஞ்சியும், குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும் ஆகிய புறத்திணைத்துறை இலக்கணங்கள் கூறப்பட் டிருக்கின்றன. இவ் விலக்கணங்களுள் ஆசிரியர் தொல்காப்பியனார் உலகம் நிலையாமையைப்பற்றிக் கூறுவது காஞ்சித்திணையாகும் என்கின்றார். "பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற்றானும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே" (தொ-புற-சூ 23) இதனை வலியுறுத்தும். தொல்காப்பியர் ஒழிந்த மற்றைய பிற்பட்ட பன்னிரு படல முடையாரும் புறப்பொருள் வெண்பா மாலைக்காரரும் "பகையரசன் போருக்கு வந்துவிட, அரசன் காஞ்சி யென்னும் பூவைச் சூடிக்கொண்டு தன்னிடத்தைக் காக்க நினைத்தது." காஞ்சித் திணை யாகும் என்றும் கூறுகின்றார். இதனை "வெஞ்சின மாற்றான் விடுதர வேந்தன், காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று" (புறப்பொருள் வெண்பா மாலை. காஞ்சிப் படலம் 1 சூ) என்ற சூத்திரமும் வலியுறுத்தும்.

நிற்க, ஆசிரியர் தொல்காப்பியர் "தாம் பெண்ணைக் கொடுக்காது மறுத்தல் பற்றிப் பகைவனாய்ப் படை எடுத்து வந்த அரசனொடு முது குடியிற் பிறந்த மக்கள் தம் பெண்ணைக் கொடுத்தற்கு அஞ்சியமை மகட்பாற் காஞ்சியாகும்" என்கின்றார். "நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பாலானும்" (தொல்-புற-23 அ) அம் முதுகுடிகள் தாம் போர் செய்து அழியக் கருதுதலின் உயிரினது நிலையாமையை உணர்ந்த காஞ்சியாயிற்று. இங்கும் நிலையாமை பற்றியே கூறி யிருக்கின்றார். புறப்பொருள் வெண்பா மாலைக்காரரும் புற-வெள்-காஞ். 24-ம் சூத்திரத்தால் இங்ஙனமே கூறி யிருக்க; சிலப்பதிகார முடையார் "முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை மதிமுடிக் களித்த மகட்பாற் காஞ்சியும்" (காட்சி. 134-135) என்ற தொடராலே முதுகுடியிலே பிறந்த இளஞ் செல்வியைத்தான் சிறியனைக் கொடுத்த காஞ்சியும் என்று கூறுகின்றமையால், பெண் கேட்ட வேந்தனொடு வேறு நின்றமை என்று கூறிய தொல்காப்பியர் முதலியோருடைய கருத்துக்கு மாறுகொளப், பெண் கேட்டவனுக்கு இனியனைக் கொடுப்பதை மகட்பாற் காஞ்சி என்றார். மேலும், சிலப்பதிகார முடை

யார் "நின்றெதிருன்றிய நீள்பெருங் காஞ்சியும்" (காட்சி-136) என்று முன்னர்க் குறிப்பிட்டபடி காஞ்சி எதிருன்றலேயும் பொருளாகக் கூறுகின்ருர்.

இன்னேரன்ன காரணங்களால், நாடகக் காப்பியத்துக்கு வேண்டாதனவாகிய இலக்கணச் செய்திகளே அடிப்படையாகக்கொண்டு, அவ்விலக்கணங்களுக்கு இலக்கியமாக இந்த ஏழு காதைகளுமமைந்து கிடக்கின்றமையால், இது பின் சேர்க்கப்பட்டிருக்குமெனக் கருத வேண்டி யிருக்கின்றது.

## நூலின் உட்பொருள்

இந்நூல் பதிகம் ஒழிந்த முப்பது காதைகளே யுடையது. அவை மூன்று காண்டங்களாகப் பிரிக்கப் பெற்றுள்ளன. சுமார் 4959 வரிகளே யுடையன. மூன்றுவரிப் பாடல்களும் இரண்டு குரவைக் கூத்துக்களும் முப்பது கதையுள் அடங்கி யிருக்கின்றன. முதற்காண்டமாகிய புகார்க் காண்டத்தே சோழ நாட்டினேயும் அதன் தலே நகராக இருந்த புகாரையும் முறையே (10) நாடு காண் காதையும் (5) இந்திர விழா ஊரெடுத்த காதையும் (சிறப்பிக்கின்றன) வருணிக்கின்றன.

மதுரைக் காண்டத்தே பாண்டிய நாட்டினேயும் மதுரை மூதூரையும் முறையே (11) காடு காண் காதையாலும் (15) ஊர்காண் காதையாலும் சிறப்பிக்கின்ருர். வஞ்சிக் காண்டமெனப் பெயரிய பகுதியில் வஞ்சி நகரின் சிறப்பினேக் கூறினரில்லே. எனினும் "வஞ்சியின் சிறப்பைக் காட்சிக் காதையால் கவின்பெற அருளினர்," என்று கூறுவாருமுண்டு. மற்றைய கதைகள் கண்ணகியைப் பேருறுப்பாகக் கொண்டு, கோவலன் குட்டுவன் மூவரையும் மற்றும் சிலரையும் சிற்றுறுப்புக்களாகக் கொண்டு செல்கின்றன.

எனவே, மேற்கூறியவாறு நான்கு காதைகள் முடியுடை வேந்தர் இருவருடைய நாடு நகரங்களேக் கூறுகின்றன. ஆனல், அந்நாட்டில் அதுபோது ஆண்ட அரசர்களின் பெயர்கள் குறிப்பாகவன்றி வெளிப்படையாகக் கூறவில்லே. ஆனல், வஞ்சிக் காண்டத்தே மாத்திரம் ஏழு இடங்களில், செங்குட்டுவன் என்ற பெயரும் அவனே அக்காண்டத்தில் குறித்திருக்கும் வீரச் செயல்களே நடத்தினவன் என்றும் அறிய வெளிப்படையாகக் கூறியுள்ளது. புகார் காண்டத்தேயுள்ள முதற்காதையுள் "இப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை யுப்பாலேப் பொற்கோட் டுழையதா, வெப்பாலுஞ் செருமிகு சினவேற் செம்பியன் ஒரு தனியாழி யுருட்டுவோன் எனவே" (மங்கல. 58-61) என்ற தொடருக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையால் (அதாவது கரிகாலன் மாறில்லாத தன் திகிரியை உருட்டுவோனகை") கோவலன் கண்ணகியை மணந்தபோது கரிகாலன் இருந்ததாக விளங்குகிறது. 'இருநில மன்னற்குப் பெருவளங் காட்ட' (இந்திர. 212) தொடருக்கு "மிக்க நிலத்தையுடைய கரிகாலற்குத் தனது வளங் காட்டவாயிருந்தது" என்ற உரையாலும்,

இருநில மருங்கிற் பொருநரைப் பெறுஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க் கண்முரசு
நாளொடு பெயர்த்து நண்ணர்ப் பெறுக இம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப
புண்ணியத் திசைமுகம் போகிய வந்நாள் (இந்திர-89-94)

என்ற தொடர்கள், கரிகாலன் வடதிசைப் போகிய நாள் என்ற இறந்த காலத்தால் கூறியுள்ளமையால், கோவலன் மாதவியைப் பெறுவதற்கு முன்னம் செய்த வடநாட்டு யாத்திரையைக் குறிப்பதாகும். (தொடரும்.)

தொடர் கதை.

# தேவ தேவி

சு. மீ. கணபதி



6 "இந்த ஊருக்கு அந்தப்பெண் வந்திருக்கிறாளா? அப்படியானால் அழைத்து வருவதற் கென்ன?"

"உங்களுடைய பேச்சை அறிந்துகொள்ளும் சக்தி எனக்கு இல்லை. இன்று இதைப் பற்றிப் பேசவேண்டியது ஏன்?"

"அந்தச் சுந்திராதேவியின் சகோதரர் வந்திருப்பதால் தான். நீ அவளை மணந்து கொள்ளப் போகிறாயா அல்லது தேவகியை......"

"கமலா நீ பேசாம லிரு. சாப்பாடு ஆகட்டும். பிறகு இதை எல்லாம் பேசலாம்."

"உன் இஷ்டப்படியே சுந்திராவை உனக்கு மணம் செய்து வைக்க நாங்கள் தீர்மானித்து விட்டோம். பெண்ணைப் பார்க்க வேண்டியதுதான் பாக்கி. அவள் சகோதரர் வந்திருப்பதால் அதுவும் சிரமமில்லை."

"எங்கு சென்றாலும் இதே தொல்லைதான். பிரம்மச்சாரியா யிருந்தால் இவ்வளவு தொந்திரவு ஏற்படுகிறதே. ஆனாலும் நான் இப்பொழுது ஒன்றும் கூற முடியாது. முதலில் சுவர்ணாவுக்கு மணமாகவேண்டும். அதன் பின்புதான் என் விஷயம். தவிரவும் சுந்திராவை இளமையிலிருந்து சோதரி எனக்கருதி வந்திருப்பதை உங்களுக்குக் கூறி யிருக்கிறேன்."

"சிறு வயதிலிருந்து பழகியதால் தானே? அவள் பெரிய பெண்ணாக ஆகுமுன் உன் விவாகம் முடிந்துவிடுமென நினைத்திருந்திருப்பாய். மற்ற வீடுகளில் சேர்ந்து வளர்ந்தவர்கள் மணம் செய்துகொள்வதில்லையா?"

"இந்தமாதிரி கேள்வி கேட்க உனக்கு யார் சொல்லிக் கொடுத்தது? அப்பா! நீங்கள் கமலாவின் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமலிருக்கிறீர்களே?"

"கமலா கேட்பது நியாயம். நீ பதில் சொல்ல வேண்டியதுதான். வீண் தர்க்கம் செய்யாமல் ஒப்புக் கொள்வது நல்லது" என்றார் அவன் தகப்பனார்.

"எதை ஒப்புக் கொள்வது?"

"இன்னும் பதினைந்து நாட்களில் உங்களிருவரின் மணத்தை நான் பார்க்க அனுமதி—அதுதான் அழைப்புச் சீட்டுக் கிடைக்குமல்லவா?" என்றார் காந்தன்.

"சுந்திரா இங்கு வந்திருக்கிறாள் என நிச்சயமாகத் தெரிகிறது. அவள் இங்கேயேதா னிருக்கிறாளா?"

"நாங்கள் சொல்லியதற்கு நேர் பதில் வேண்டும். அப்படி இல்லையென்றால் தேவகியை மணந்துகொள்ள வேண்டும். இந்த இரண்டு பெண்களுள் நீ யாரை விரும்புகிறாய் என்பதை முதலில் தெரிவி."

"சுவர்ணாவின் மணம் முடியுமுன்பு இந்தப் பேச்சுக்களையே நான் விரும்பமாட்டேன்."

"ஆனால் அந்த சுவர்ணாவை யாவது மணந்து கொள்கிறாயா? தேவகியின் பார்வை மயக்கியதுபோல் இவர்களின் பார்வை உன்னை மயக்க வில்லைபோலும். அதனால் இப்படி வாதாடுகிறாய். இருப்பினும் சுவர்ணாவை நாங்கள் சரியாகப் பார்த்ததில்லை யாதலால், இந்த இரண்டு பெண்களுள் ஒருத்தியை நீ மணக்க வேண்டும் என்று நாங்கள் நினைக்கிறோம். உன்னுடைய சம்மதமின்றிப் பேசுகிறோம்" என்றார் வாசுவின் தகப்பனார் சோமுவைப் பார்த்து.

"என் குடும்பத்திலும் பெரியவர்கள் கிடையாது. நீங்கள்தான் இதனை முன்னின்று நடத்தவேண்டியவர்கள்" என்றான் சோமு.

"நீயே, அறிவுடைய பெண் என்று கூறிச் சுந்திராவை மணக்க மறுப்பது மூடத்தன மல்லவா? அவளையேதான் நீ மணந்து கொள்ளப் போகிறாய். நாம் இதுவரை செய்தது வீண் தர்க்கம் என நன்றாகத் தெரிகிறது. சாப்பிட எழுந்திருங்கள். சுந்தரா இங்கு ஒரு இடத்துக்குச் சென்றிருக்கிறாள். அவளும் வந்துவிடுவாள்...கவலைப்படவேண்டாம்" என்று வாசுவைப் பார்த்துச் சொன்னார் காந்தன்.

எல்லோரும் உட்கார்ந்த பின்பு கமலாவும், சுந்திராவும் வந்து உட்கார்ந்தனர். சோமுவும், வாசுவும் திடீரென அவள் எப்படி வந்தாள் என்ற ஆச்சரியத்துடன் சுந்திராவைப் பார்த்தனர்.

"அண்ணா உங்கள் நண்பர் ஏன் அவ்விதம் விழிக்கிறார்? நீங்கள் இருவரும் இதுவரை எங்கிருந்தீர்கள்?" என்றாள் சுந்திரா.

"சுந்திரா! உன்னைப் பார்ப்பது விரும்பத் தக்கதல்ல—இல்லையா? மணம் செய்துகொள்ளத் துடிக்கிறாய்—சிபார்சுக்கு ஆட்கள் தேடிவந்திருக்கிறாய்—ஆனால் பார்ப்பது குற்றம். நல்லபடி நீ வந்த வேலையை முடித்துக் கொண்டு போகாமல், இங்கு உன் பேச்சுத் திறனைக் காண்பித்து உனக்காக எல்லோரும் பரிந்து பேசச் செய்திருக்கிறாய்" என்றான் வாசு.

"வாசு! இதுவே உன் முடிவான தீர்மானமானால் சரிதான். எங்களுக்கு ஊருக்குப் போக உத்திரவு கொடுங்கள்" என்றான் சோமு. வற்புறுத்திச் சொல்லியும் அவன் கேட்க வில்லை, கடைசியில் காந்தன் சொல்லுக்கு அவன் ஒப்புக் கொண்டான். எதனாலுமல்ல, பெரிய ஆபீஸாராயிற்றே என்றுதான். ஹோட்டலில் தங்கி யிருப்பதாகவும் மாலையிலும், மறுதினம் காலையிலும் மாத்திரம் வந்து பேசி விட்டுச் செல்வதாகவும் கூறி, சுந்திராவையும் அழைத்துக் கொண்டு தான் தங்கியிருக்க வசதி செய்த ஹோட்டலை அடைந்தான்.

"கவலை யற்றிருந்த உங்களுக்குக் கவலை, பணச் செலவு முதலியவற்றை உண்டாக்கி விட்டேன். ஒரே தீர்மானமாக இவ்விதம் கூறுவார் என நான் எதிர்பார்க்க வில்லை. ஆனால் அவர்கள் வீட்டிலுள்ளவர்கள் நமக்காகப் பாடு பட்டார்கள். அவர்களும் இவருடைய பதிலால் மிகுந்த கவலைப் படுவார்கள். அவர்கள் கவலைப் படுவதற்கும் நான் காரணமாயிருக்க நேர்ந்து விட்டது பற்றி என் மனம் துன்பப் படுகிறது. இவர் என்னைச் சகோதரி எனக் கருதி யிருப்பதாகவும், அந்த எண்ணத்தை மாற்ற முடியா தென்றும் சொன்னா ரல்லவா? இன்று முதல் நான் அவருக்கு அன்னியப் பெண்தான். அவருடன் பேசுவதையும் இன்றுடன் விட்டு விடுவேன். என் மணத்தைப் பற்றி வேண்டியதை நானே முன்னின்று கவனித்துக் கொள்கிறேன். முடியும் தருணத்தில் உங்களுக்குச் சொல்கிறேன். நீங்கள் இனி இதற்காகச் சிரமமோ அன்றிக் கவலையோ கொள்ள வேண்டாம். அவர்களுக்காக நீங்கள் இருப்பதாகக் கூறியதை நான்

முதலில் விரும்பவில்லை. ஆயினும் அவர்கள் காட்டிய பேரன்புக்காக ஒப்புக் கொண்டது நல்லது தான். நாளை பகல் பத்துமணி வண்டியில் சென்றால் மாலையில் ஊரி லிருக்கலாம்" என்றாள் சுந்திரா.

இவள் பேசியதின் போக்கும், படபடப்பும் விபரீதமாகவே சோமுவிற்குத் தோன்றிற்று. ஆயினும் இச்சமயம் ஒன்றும் பேசாதிருத்தல் நலமெனக் கருதினான். சுந்திராவின் மனம் பெரிதும் பாதிக்கப்பட் டிருக்கிறது என்பதையும் உணர்ந்தான். அச்சமயம் வாசு அங்கு வந்நான். சோமுவின் மனம் அவனைப் பார்த்ததும் துயரமடைந்தது. உட்காரும்படி சொன்னான். சுந்திரா மறுபக்கம் திரும்பிக் கொண்டாள்.

"சோமு! என்மீது வருத்தமா? உனக்குத் தெரியாததை நான் சொல்ல வரவில்லை. என்னால் சுந்திராவை வேறு விதமாக நேசிக்க முடியாது. உனக்கு அவள் எப்படியோ அப்படித்தான் எனக்கும். நீயும், நானும் சகோதரர் போன்று நடந்து கொள்கிறோம்.—சுந்திரா! வீண் கவலைப் படாதே. சுவர்ணாவுக்கு நான் வரன் தேடி மணம் செய்து வைக்கத் தீர்மானித்திருப்பதுபோல் உன் விஷயத்திலும் நடந்து கொள்வேன். இதற்காக நீ என்னை எப்படி நினைத்தாலும் சரி. முன் போலவே என்றும் என்னிடம் நடந்து கொள்ள வேண்டும். உன்னுடைய அன்பை எப்பொழுதும் போல் சோதரன் என்ற முறையில் காண்பித்து வர வேண்டும். அந்த அன்பை நான் இழக்க மாட்டேன்" என்று வருத்தத்துடன் கூறினான் வாசு.

சுந்திரா பேசவே யில்லை. சோமு வருத்தத்துடன் வாசுவைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் முடித்ததும், "எனக்கு வருத்தம் இல்லை யென்று கூற முடியாது. ஆனால் சுந்திராவைத் தேற்றும் வழிதான் எனக்குத் தெரிய வில்லை. அவள் ஆசை நிராசையாகி விட்டது. வேறு எதையாவது பேசு! வீண் கவலை கொடுக்குப் சமாசாரம் வேண்டாம்" என்றான் சோமு. சிறிது நேரமிருந்து வாசு கவலையுடன் வெளியில் சென்றான்.

அன்று மாலையில் சோமுவும், சுந்திராவும் காந்தன் இல்லம் சென்று பேசிக் கொண்டிருந்தனர். சுந்திரா அதிகமாக ஒன்றும் பேசவில்லை. இதைக் கண்டு எல்லோரும் வருந்தினர். சுந்திராவின் முகத்தில் சிறிதும் களை என்பதே இல்லாம விருந்தது. கமலா என்ன தேறுதல்கள் கூறினும் சுந்திரா கேட்ட கேள்விக்குப் பதிலுடன் நின்று விட்டாள். மறுதினம் காலையிலு மப்படியே. பல சாமான்களை ஒரு பெட்டியில் வைத்துக் கமலா பரிசாகச் சுந்திராவுக்குக் கொடுத்தாள். சுந்திரா அதைப்பெற மறுத்தாள். கட்டாயப்படுத்தி எடுத்துப்போகச் சொன்னாள். வேண்டா வெறுப்பாக அதைப் பெற்றுக் கொண்டு எல்லோருடைய மனதையும் கவரும் கண்ணீருடன் செலவு பெற்றுச் சோமுவுடன் புறப்பட்டாள்.

———o———

# பதின்மூன்றாவது அத்தியாயம்

———

## பத்மாசனியின் முடிவு

"அநாதை. ஐயோ! இதை நினைத்தால் ஆவி துடிக்கிறது. நீ அநாதையாகப் போவதை அறியும் ஞாபகசக்தி யில்லாதபடி யிருந்தால் நலமாக இருக்கும். என் உயிர் இப்பொழுதே பிரிந்தால் ஆனந்தமுடன் இறக்கச் சித்தமாக இருக்கிறேன். உலகத்திலுள்ளவர்கள் மத்தியில் நீ அநாதையா

கக் கருதப்படுவாய். ஆனல் ஆண்டவன் இருக்கிறான். அவன் துணை உனக்கு இருக்கும். கவலைக்கும், துன்பத்திற்கும் இடம் கொடாதே. நீ உலகமறியாத குழந்தை. சந்தர்ப்பங்களுக்கு ஏற்றபடி நடந்துகொள். நான் வேறு என்ன சொல்லப் போகிறேன்? உன்னை வாழ்க்கைப் படச் செய் திருந்தால் கவலையின்றி மரணத்தை எதிர் பார்ப்பேன். அந்தப் பாக்கியம் எனக்கு இல்லாது போய் விட்டது. எல்லாம் விதியின்படி நடைபெறும். ஆகவே வீண் கவலைகளுக்கு மனம் கொடாமல் பார்த்துக்கொள். நீ அழு வது கண்டு நான் துன்பமடைகிறேன். மனதைத் தேற்றிக்கொள் குழந் தாய்'' என்றாள் பத்மாசனி.

சுவர்ணா 'அம்மா' என்பதைத் தவிர வேறு பேசமுடியாது தவித்தாள். காலையில் மருத்துவன், இரண்டு நாட்களில் பத்மாசனி ஆண்டவன் நிழலை அடைவாள் எனக் கூறியதிலிருந்து இருவரும் அழுகிறார்கள். தன்னால் கூடியவரை தன் துக்கத்தை மறைத்துக் கொண்டு சுவர்ணாவுக்குத் தேறுதல் கூறினும் துக்கம் மறையக் கூடியதா? தன்னைப் பெற்று, தனக்காகப் பல இன்னல்கள் அனுபவித்து வளர்த்த தாய், சுவர்ணா என அன்புடன் அழைக் கப்போவது இன்னும் இரண்டு நாட்களுக்குத்தான் எனத் தெரிய வந்த பின்பு, சுவர்ணாவிற்குத் தேறுதல் மொழிகள் பயன் படவில்லை. காலையி லிருந்து ஒரே அழுகை தான். காலையிலிருந்து இருவரும் ஆகாரம் உட் கொள்ளவு மில்லை.

பத்மாசனியின் சொற்படி வாசுவுக்குத் தந்தி அடிக்கப்பட்டது. வாசு தனக்குத் தந்தி வந்திருக்கிறது எனக் கேட்டதும் திகைத்தான். தவிரவும் அன்று காலையில்தான் சுந்திராவும் சோமுவும் ஊர் சென்றதால் மிகவும் அதிகத் திகைப்போடு தந்தியைப் பிரித்துப் பார்த்தான். "ஐயோ ஈஸ்வரா" என்று அவனை அறியாது அவன் வாய் சத்தமிட்டது. பக்கத்திலிருந்த நாற் காலியில் அப்படியே விழுந்தான்.

இவன் போட்ட சப்தத்தைக் கேட்டு எல்லோரும் பதறி ஓடி வந்தனர். வாசுவின் கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது. தரையை வெறித்துப் பார்த்தபடி இருந்தான்.

"வாசு! உனக்கென்ன? ஏன் சப்தமிட்டாய்? நீ அழுவானேன்?'' என் றார் அவன் தகப்பனர்.

பதில் கூறுதபடி தன் சாமான்கள் வைக்கப்பட் டிருந்த அறைக்கு விரைந்து சென்றான். பணப்பையைக் கையில் எடுத்துக் கொண்டான். "கமலா! மிகவும் அவசரம். ஒரு நூறு ரூபாய் கொடு. மறுக்காதே. ஊர் போனதும் பாங்கியிலிருந்து வாங்கி அனுப்பி விடுகிறேன்.'' என்றான் வாசு.

"வாசு உனக்கு உடம்பு உன்ன? நீ செய்யும் காரியங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லையே. சரி. நீ கேட்டவைகளை எடுத்து வருகிறேன்'' என்று கமலா கூறி உட்சென்று, கொண்டு வந்தாள்.

" 'பட்ட காலிலேயே படும்' என்பார்கள்; அது சரியாயிற்று. இன் னும் இரண்டு மணி சாவகாசமிருக்கிறது ரயிலுக்கு. எல்லோரும் உட்கா ருங்கள். விஷயத்தைச் சாவதானமாகச் சொல்லிவிட்டே போகிறேன்'' என்றான்.

"சுவர்ணத்தை நேரில் பார்க்கும் வரையில் என் அன்பு எல்லாம் உங் கள் மீதும் சுந்திராவின் மீதும் இருந்தது. சுந்திரா என்னை எவ்வளவு

நேசித்தாளோ அதே அளவு சுவர்ணுவும் என்னை நேசிக்கிருள். நேற்றுச் சுந்திராவின் அன்பு போய்விட்டது. அவள் என்னை வெறுக்கிருள் என்று தெரிந்ததிலிருந்து நான் பட்ட அவஸ்தையும், நேற்று இரவு நான் அதற்காக அழுததையும் ஒருவரும் பார்க்கவில்லை. இன்று அவளை ரயிலேற்றி வந்ததுமுதல் பித்துப் பிடித்ததுபோ லிருக்கிறது. எதுவும் செய்ய முடியவில்லை. இந்த நிலேயில் இந்தத் தந்தி வந்தது. "நான் சாகிறேன். அநாதையாகப் போகும் என் குழந்தையைக் காப்பாற்று" என்று பத்மாசனி தந்தி கொடுத்திருக்கிருள். அவள் ஊர் சென்று ஆறு நாட்களே ஆகின்றன. இதற்குள்ளாக அவளுக்கு இந்தக் கதியா நேர வேண்டும்? நான் போய்ச் சேரும் வரை பத்மாசனியின் உயிர் இருக்க வேண்டுமென்ற கவலை என்னைப் பெரிதும் பாதிக்கிறது. ஆண்டவன் என்னை முழுவதும் சோதிக்க முற்பட்டு விட்டான். மணமாக வேண்டிய பருவத்தில் உள்ள ஒரு பெண்ணை, நான் உலக அபவாதமின்றிக் காப்பாற்ற வேண்டும். அவளுக்கு மணம் முடிக்க வேண்டும். பத்மாசனியின் ஸ்தானத்தில் நான் இருந்து எல்லாம் நடத்த வேண்டி நேரிட்டு விட்டது. 'என் சுவர்ணு அநாதையல்ல' என்று பத்மாசனியிடம் கூறுவதற்கு எனக்கு நேரமிருந்தால் என் மனம் சாந்தி பெறும். இதையெல்லாம் நினைத்துத்தான் கவலைப் படுகிறேன். நீங்கள் யாரும் இதற்காகக் கவலைகொள்ள வேண்டாம்" என்ருன் வாசு.

"அந்தமாதிரி ஒன்றும் நேரிடாதபடி ஆண்டவன் காப்பாற்றுவான். நீ கவலைப்படாதே. இங்கிருந்து நூற்றைம்பது மைல்கள் தானே இருக்கிறது. காரில் சென்றுவிடு. ரயிலில் சென்ருல் காலதாமத மாகலாம்" என்று சொல்லி டிரைவரைக் கூப்பிட்டார் காந்தன். அவன் வந்ததும் "மிகவும் ஜாக்ரதையாக, எவ்வளவு வேகமுடன் காரைச் செலுத்த முடியுமோ அவ்வளவு வேகமாக ஐயாவை அழைத்துச்சென்று, அவர் வரும்பொழுது திரும்பி அழைத்துவா. வாசு புறப்படு. சுவர்ணுவை அழைத்துக்கொண்டு இங்கேயே வந்துவிடு" என்ருர்.

வாசு நன்றி தெரிவிக்கும் முறையில் மரியாதையாக எல்லோரையும் பார்த்து விட்டுக் காரில் உட்கார்ந்தான். அப்பொழுது மணி நான்கு. இரவு ஏழரை மணிக்கு ஊரை அடைந்தான். விசாரித்துக் கொண்டு பத்மாசனி இருக்குமிடம் சென்ருன். அவள் உயிருடனிருக்கிருள் என்பதை அறிந்து அவள் சமீபம் சென்ருன்.

"அப்பா வந்தாயா? என் மனதின் பாரம் தீர்ந்தது. என் சுவர்ணு அநாதையல்ல. சுவர்ணு! வாசுவை நம்பு. அவன் ஒருவன் தான் உனக்கு உறவினன். அவன் உன்னைக் காப்பாற்றுவான். நீங்களிருவரும் நீடூழி காலம் சுகமாக வாழ வேண்டும். வாசு நீ சிறிது காலம் மணம் செய்து கொள்ளாமலே யிரு. ஒருகால் சுவர்ணுவை விரும்பினல் மணந்துகொள். என் மரணப் படுக்கையில் உன்னை வற்புறுத்த விரும்பவில்லை. நீ அவளை மணந்துகொள்ள முடியாது என்று தீர்மானமாகத் தெரிந்தால் உத்தமன் ஒருவனுக்கு, அவன் பரம ஏழையாயினும் இவளை மணம் செய்து கொடுத்து விடு. நீ வேறொருவனுக்கு அவளை மணம் செய்து கொடுத்தால் கமலாவைப் போல் இவளையும் உன் சகோதரியாகக் கவனித்துக் கொள். என்னல் அதிகம் பேச முடியவில்லை. என் செல்வத்தை உன்னிடம் அடைக்கலமாகக் கொடுத்து விட்டேன்" என்ருள் பத்மாசனி. அவள் கண்கள் சிறிது பிரகாசமாகத் தோன்றியது.

(தொடரும்.)

# தாரண ஹு கார்த்திகைமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா வக் | க ரீ | பா | க |
| 1 | 3 | 39 | 54 | 210 | 30 | 211 | 19 | 210 | 12 | 225 | 21 | 149 | 49 | 246 | 40 | 77 | 18 | 88 | 18 |
| 2 | 3 | 43 | 50 | 211 | 31 | 223 | 54 | 210 | 54 | 226 | 49 | 149 | 58 | 247 | 53 | 77 | 15 | 88 | 14 |
| 3 | 3 | 47 | 47 | 212 | 32 | 236 | 40 | 211 | 36 | 228 | 18 | 150 | 07 | 249 | 06 | 77 | 12 | 88 | 11 |
| 4 | 3 | 51 | 43 | 213 | 33 | 249 | 42 | 212 | 18 | 229 | 46 | 150 | 16 | 250 | 19 | 77 | 09 | 88 | 08 |
| 5 | 3 | 55 | 40 | 214 | 33 | 262 | 45 | 213 | 01 | 231 | 13 | 150 | 24 | 251 | 31 | 77 | 07 | 88 | 05 |
| 6 | 3 | 59 | 36 | 215 | 34 | 276 | 11 | 213 | 43 | 232 | 40 | 150 | 33 | 252 | 44 | 77 | 04 | 88 | 02 |
| 7 | 4 | 03 | 33 | 216 | 34 | 289 | 38 | 214 | 26 | 234 | 06 | 150 | 41 | 253 | 57 | 77 | 01 | 87 | 58 |
| 8 | 4 | 07 | 29 | 217 | 35 | 303 | 32 | 215 | 08 | 235 | 31 | 150 | 50 | 255 | 10 | 76 | 58 | 87 | 55 |
| 9 | 4 | 11 | 26 | 218 | 35 | 317 | 27 | 215 | 51 | 236 | 56 | 150 | 58 | 256 | 22 | 76 | 54 | 87 | 52 |
| 10 | 4 | 15 | 22 | 219 | 36 | 331 | 48 | 216 | 34 | 238 | 20 | 151 | 06 | 257 | 35 | 76 | 51 | 87 | 49 |
| 11 | 4 | 19 | 19 | 220 | 37 | 346 | 10 | 217 | 17 | 239 | 43 | 151 | 14 | 258 | 47 | 76 | 48 | 87 | 46 |
| 12 | 4 | 23 | 15 | 221 | 38 | 0 | 46 | 218 | 00 | 241 | 04 | 151 | 22 | 260 | 00 | 76 | 45 | 87 | 43 |
| 13 | 4 | 27 | 12 | 222 | 38 | 15 | 23 | 218 | 43 | 242 | 24 | 151 | 29 | 261 | 12 | 76 | 41 | 87 | 39 |
| 14 | 4 | 31 | 08 | 223 | 39 | 29 | 50 | 219 | 26 | 243 | 43 | 151 | 37 | 262 | 25 | 76 | 37 | 87 | 36 |
| 15 | 4 | 35 | 05 | 224 | 40 | 44 | 17 | 220 | 09 | 245 | 01 | 151 | 44 | 263 | 37 | 76 | 33 | 87 | 33 |
| 16 | 4 | 39 | 01 | 225 | 41 | 58 | 09 | 220 | 52 | 246 | 15 | 151 | 52 | 264 | 50 | 76 | 29 | 87 | 30 |
| 17 | 4 | 42 | 58 | 226 | 42 | 72 | 01 | 221 | 35 | 247 | 29 | 151 | 59 | 266 | 02 | 76 | 25 | 87 | 27 |
| 18 | 4 | 46 | 54 | 227 | 43 | 85 | 07 | 222 | 18 | 248 | 38 | 152 | 06 | 267 | 14 | 76 | 21 | 87 | 24 |
| 19 | 4 | 50 | 51 | 228 | 43 | 98 | 12 | 223 | 01 | 249 | 46 | 152 | 13 | 268 | 26 | 76 | 17 | 87 | 20 |
| 20 | 4 | 54 | 47 | 229 | 44 | 110 | 37 | 223 | 44 | 250 | 48 | 152 | 20 | 269 | 38 | 76 | 13 | 87 | 17 |
| 21 | 4 | 58 | 44 | 230 | 45 | 123 | 01 | 224 | 28 | 251 | 49 | 152 | 26 | 270 | 50 | 76 | 09 | 87 | 13 |
| 22 | 5 | 02 | 40 | 231 | 46 | 135 | 00 | 225 | 11 | 252 | 42 | 152 | 33 | 272 | 02 | 76 | 05 | 87 | 10 |
| 23 | 5 | 06 | 37 | 232 | 47 | 146 | 58 | 225 | 54 | 253 | 34 | 152 | 39 | 273 | 14 | 76 | 01 | 87 | 07 |
| 24 | 5 | 10 | 33 | 233 | 48 | 158 | 51 | 226 | 37 | 254 | 15 | 152 | 45 | 274 | 26 | 75 | 57 | 87 | 04 |
| 25 | 5 | 14 | 30 | 234 | 49 | 170 | 43 | 227 | 21 | 254 | 56 | 152 | 51 | 275 | 37 | 75 | 52 | 87 | 01 |
| 26 | 5 | 18 | 26 | 235 | 50 | 182 | 47 | 228 | 04 | 255 | 22 | 152 | 57 | 276 | 49 | 75 | 48 | 86 | 58 |
| 27 | 5 | 22 | 23 | 236 | 51 | 194 | 51 | 228 | 48 | 255 | 47 | 153 | 03 | 278 | 00 | 75 | 43 | 86 | 54 |
| 28 | 5 | 26 | 19 | 237 | 52 | 207 | 20 | 229 | 31 | 255 | 54 | 153 | 09 | 279 | 12 | 75 | 39 | 86 | 51 |
| 29 | 5 | 30 | 16 | 238 | 53 | 219 | 49 | 230 | 15 | 256 | 00 | 153 | 14 | 280 | 23 | 75 | 34 | 86 | 48 |

**ஆகாயக் காட்சி:-**

- 2உ காலை மணி 7-36க்கு சசிக்குத் தெற்கில் பா 4-25ல் புதனும்,
- 4உ ,, ,, 7-58க்கு ,, ,, பா 3-25ல் சுக்ரனும்,
- 17உ பகல் ,, 3-22க்கு ,, ,, பா 0-27ல் சனியும்,
- 23உ மாலை ,, 5-55க்கு ,, ,, பா 3-23ல் குருவும்,
- 29உ இரவு ,, 1-44க்கு ,, ,, பா 4-06ல் குஜனும், சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள் முதலியன:—** *11உ பகல் மணி 11-52க்கு புதன் தனுர் ராசிக்கும், 2உ பகல் மணி 12-02க்கு குரு கன்யா ராசிக்கும், 20உ பகல் மணி 2-10க்கு சுக்ரன் மகர ராசிக்கும் பிரவேஸமாகின்றன. இம்மாதம் முழுவதும் "பாநுமத்யம்."*

**அயனம்சம் பா-22 கலை-57 விகலை 18·5853 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.**

**ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.**

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாரணஆ கார்த்திகைமீ கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1354, கொல்லமாண்டு 1120, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944ஆ நவம்பர்—1944ஆ டிசம்பர்மீ

| கார்த்திகை | நவம்பர் மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | பிர55-51 | வி9-07 | சித்60 | மார்க்க சீர்ஷ சுத்தம் |
| 2 | 17 | வெள் | துதி56-25 | அ12-00 | சி12-00ம | சந்திர தர்ஸனம் [கரிநாள் |
| 3 | 18 | சனி | திரு56-20 | கே13-35 | சித்60 | இராஸாயன முயற்சிகள் |
| 4 | 19 | ஞா | சது54-36 | மூல14-26 | அ14-26சி | மாஸ சதுர்த்தி விரதம் |
| 5 | 20 | திங் | பஞ்51-37 | பூ14-19 | மர60 | நாகபஞ்சமி-நாக பூஜை |
| 6 | 21 | செவ் | சஷ்48-11 | உத்12-37 | பி12-37சி | சஷ்டி விரதம் |
| 7 | 22 | புத | சப்43-47 | திரு10-12 | சி10-12பி | மித்ர பஞ்சமி |
| 8 | 23 | வியா | அ38-24 | அவி6-39 | சி6-39ம | நா-11ல் வாஸ்து |
| 9 | 24 | வெள் | நவ33-07 | சத2-55 பூர59-23 | சித்60 | பிரளய கல்பாதி, அவமாகம் [தினம் |
| 10 | 25 | சனி | தச26-59 | உட்55-12 | சி55-12பி | சத்தியாநிதி தீர்த்த புண்ய |
| 11 | 26 | ஞா | ஏ21-01 | ரே51-03 | அ51-03சி | மோக்ஷ ஏகாதசி, சத்தியநாத தீர்த்த புண்ய தினம் |
| 12 | 27 | திங் | து15-08 | அசு47-24 | சித்60 | மத்ய துவாதசி |
| 13 | 28 | செவ் | திர9-36 | பர43-47 | சித்60 | பாஷாண சதுர்த்தசி |
| 14 | 29 | புத | ச◯4-50 | கி✻40-49 | அ40-49சி | கிருத்திகை விரதம் |
| 15 | 30 | வியா | பௌ0-37 பி57-41 | ரோ39 02 | மர60 | |
| 16 | 1 (1944ஆ டிஸம்பர்மீ) | வெள் | துதி55-48 | மிரு38 28 | சித்60 | |
| 17 | 2 | சனி | திரு54-35 | திரு39-07 | சித்60 | |
| 18 | 3 | ஞா | சது55-51 | புன40-12 | சித்60 | |
| 19 | 4 | திங் | பஞ்57-39 | பூச43-15 | சித்60 | |
| 20 | 5 | செ | சஷ்60-00 | ஆ47-24 | சித்60 | |
| 21 | 6 | புத | சஷ்0-41 | மக52-13 | சி52-13அ | |
| 22 | 7 | வியா | சப்4-13 | பூர58-12 | சி58-12ம | |
| 23 | 8 | வெ | அஷ்8-24 | உத்60-00 | சித்60 | திஸ்ரோஷ்டகா |
| 24 | 9 | சனி | நவ13-50 | உத்4-13 | மர60 | மந்திரார்த்தங்கள் |
| 25 | 10 | ஞா | தச19-14 | அஸ்10-47 | அ10-47சி | சுபகாரங்கள் |
| 26 | 11 | திங் | ஏ24-37 | சித்16-49 | பி16-49அ | ஸாபல்ய ஏகாதசி |
| 27 | 12 | செவ் | து28-50 | சு22-41 | சி22-41ம | பிரதோஷம் |
| 28 | 13 | புத | திர31-49 | வி27-35 | சித்60 | மாஸ சிவராத்திரி |
| 29 | 14 | வியா | சசி34-12 | அ32-36 | சி32-36பி | ஆராய்ச்சிகள் |

வ-சரா
2-கன்-குரு
11-தனு-புத
20-மகர-சுக்
குரு
சு'கே சூ-பு-செ

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE " ANANDA BODHINI " PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET MADRAS.

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊரிய மேக ரோகங்கள், மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல சூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

# எலிக்ஸிரைன்

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், சூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப்புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-4-0**

# குன்மக் குடாரி

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிற்றுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைச்சல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளர்தல், குலைக்கட்டி, ஈரலில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும். **30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

**தனலட்சுமி கம்பெனி, கே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிக்கின்றனர். வியாதியினுலாவது வேறு எந்தக் காரணத்தினுலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனுல் உண்டாகக்கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறேம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினுலாவது, புழு வெட்டினுலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்: இதனுல் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கை கால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தை தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும் பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

# நரை மயிர் கருக்குந் தைலம்



தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும், மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# மதிமோச விளக்கம்

(தூசி. இராஜகோபால பூபதி அவர்கள் இயற்றியது.)

தருமமே தழைத்தோங்கி வளர்ந்துவந்த மகா புண்ணிய பூமியாகிய நம் பரத கண்டத்தில், கலிகாலந் தொடங்கியதிலிருந்து, மனிதர் காலவயப்பட்டு, மன மாறுபட்டுத் தருமத்தில் செலுத்தும் சிந்தையை மிகுதியும் அதர்மத்தில் செலுத்தி வருவதால் அறநெறி குறைந்து மறநெறி வளர்ந்து வருகின்றது. அதற்கேற்ப வஞ்சமும் சூதும், பஞ்சமாபாதகமும், அவற்றிற் கஞ்சா நெஞ்சமும் படைத்த மனிதரே நாள்தோறும், நாடுகள்தோறும், ஊர்தோறும், வீடுகள்தோறும் மலிந்து விநோதம், விநோதமான படுமோசம், மதிமோசம், நிதிமோசங்களையும், சூது வஞ்சனைகளையும் செய்து வருகின்றனர். காலம் செல்லச் செல்ல இதற்குமுன் கண்டும், கேட்டுமிராத எண்ணிறந்த மோச நாசச் செயல்கள் எங்கும், என்றும் நூதனம் நூதனமாகத் தோன்றி அதியற்புதத்துடன் வளர்ந்துகொண்டே வருகின்றன; அவற்றைச் செய்யும் மனிதர்களும் உற்பாத பிண்டங்களாய் ஒருவரை யொருவர் எடுத்து விழுங்குவோராய் அற்புதமாக உற்பவித்து மலையை விழுங்கிய மகாதேவன்போல வளர்ந்து சிறந்து ஜெகஜாலப் புரட்டர்களாயும், அண்டப் புரட்டராயும், திகர்ப் புளுகராயும் பரவி வருகின்றனர். இவர்களுடைய மகாமோசச் செயல்களால் சூதுவாதறியாத உலகத்தார் அடையும் கஷ்ட நஷ்டங்களுக்களவேயில்லை. வியாபாரத்தொழில் முழுவதிலும் மோசம்; விவசாயத்திலும் மோசம்; உத்தியோகத் துறைகளிலும் ஒப்பில்லா மோசம்; வித்தையிலும் மோசம்; வேடிக்கையிலும் மோசம்; வைத்தியத்திலும் மோசம்; மாந்திரீகத்திலும் மோசம்; சோதிடத்திலும் மோசம்; சோற்றுக்கடையிலும் மோசம்; கப்பலிலும் மோசம்; ரெயிலிலும் மோசம்; நீதிச்சபைகளிலும் மோசம்; தேசச்சேவையிலும் மோசம்; கோயிலிலும் மோசம்; குளத்திலும், வீட்டிலும் மோசம்; காட்டிலும் மோசம்; நாட்டிலும் மோசம்; நகரத்திலும் மோசம். இப்படியே மனிதர் தலைநீட்டு மிடங்களெல்லாம் மோசமாகவேயிருக்கின்றன. இப்படிப்பட்ட மோசங்களிலிருந்து தப்பிப் பிழைப்பதற்கான நீதிமதிகள் இதில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன,

இதன் விலை ரூபா 1—0—0.

# இரத்தினபுரி இரகசியம்

இதில் மிக்க ஆச்சரியமும், நெஞ்சு திடுக்கிடக்கூடியவையும், ஆதிமுதல் அந்தம் வரையில் மனதைக் கவரக்கூடியவைகளுமான சம்பவங்கள் நிறைந்துள்ளன. அநேக நீதிகளும், புத்திமதிகளும் தக்க திருட்டாந்த பூர்வமாக நிரூபிக்கப்படுகின்றன. நமது சிறுவர், சிறுமிகளும், ஸ்திரீகளும் அவசியமாய் உணரவேண்டிய இலௌகீக ஆசார விஷயங்களைப்பற்றி ஆங்காங்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-ம் பாகம் | விலை ரூ. | 1—12—0 | 6-ம் பாகம் | விலை ரூ. | 1—10—0 |
| 2-ம் | ,, | 2— 4—0 | 7-ம் | ,, | 2— 4—0 |
| 3-ம் | ,, | 2— 0—0 | 8-ம் | ,, | 2— 4—0 |
| 4-ம் | ,, | 2— 0—0 | 9-ம் | ,, | 2— 0—0 |
| 5-ம் | ,, | 2— 0—0 | 9 பாகம் கொண்டது | | 18— 2—0 |

# அர்ஜுனசிங்கும், சுந்தரும்

இது, ஓர் கவர்ச்சியான நாவல். இதில் இரண்டு துப்பறியும் நாவல்கள் அடங்கி யிருக்கின்றன. இதன் விலை அணா 3.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

